# மங்கை

டிசம்பர் '93

★ 'திருமணஞ்சேரி'
- திருத்தல மகிமை

★ அழகிய முகத்திற்கு
- சசி சவுத்ரியின் சிறப்புப் பேட்டி

★ மார்கழியின் மகத்துவங்கள்

★ டென்ஷனைப் போக்கும்
கர்நாடக இசை

★ யோகாசனங்கள்

★ சிறுகதைகள், கட்டுரைகள்

மற்றும் பல சிறப்புப் பகுதிகள்

விலை ரூ.6/-




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி



## எம் மதத்திற்கும் ஏற்ற பொன்மொழி

சிகாகோவில் செப்டம்பர் மாதம் நடந்த இரண்டாவது உலக அனைத்து மதங்கள் மன்றம் "நம்மைப் பிறர் மதிக்க நினைப்பதுபோல நாமும் பிறரை மதிக்க வேண்டும்" என்ற கருத்தை வலியுறுத்தியது. நூறு ஆண்டுகளுக்கு முன்பு இதே இடத்தில்தான் முதலாவது உலக அனைத்து மத மன்றம் கூடியது. அதில்தான் பாரத நாட்டின் சுவாமி விவேகானந்தர் மறக்க முடியாது சொற்பொழிவை ஆற்றினார்.

இந்த இரண்டாவது மன்றத்தில் ஹிந்து 'சீக்கிய' புத்த ஜைன, கிருஸ்துவ, இஸ்லாமிய மதங்களின் பிரதிநிதிகள், 25 பேர் கலந்து கொண்டனர். அப்போதும் இதே குறிக்கோள்தான் வலியுறுத்தப்பட்டு உலகக் கோட்பாடு பிரகடனம் வெளியிடப்பட்டது.

இப்பிரகடனம் வன்முறை இன்றி இயற்கைக்கு மரியாதைத் செலுத்தி ஆண் பெண் என்ற பாகுபாடுகள் இல்லாமல் பிரச்னைகளைத் தீர்கக வேண்டும் எனக் கூறுகிறது. இந்த ஒன்பது பக்கப் பிரகடனத்தில் கடவுள் என்ற சொல் தவிர்க்கப்பட்டுள்ளது கவனிக்கத் தக்கது. ஏனெனில் ஒரு சிலர் இதனை ஏற்காது இயற்கை சக்தியை வழிபடுவதுதான்.

மனித குல ஒற்றுமையை சுவாமி விவேகானந்தர் வலியுறுத்தியதை இதில் காணலாம். தலாய்லாமா இந்தப் பொன்மொழி உலகப் பிரச்னைகளை உலக அமைதிக்காகத் தீர்க்க வழி செய்கிறது எனக் கூறியுள்ளார்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயேசு கிருஸ்து "உன்னைப் பிறர் நடத்த விரும்புவதுபோல நீ பிறரையும் நடத்து" என்றார். அதனையே இன்று எல்லா மதத்தலைவர்களும் நமக்கு நினைவூட்ட வேண்டிய நிலைக்கு நாம் தள்ளப்பட்டிருப்பதைப் பாருங்கள்

மதிமுகம்: 93 டிசம்பர் 1993 புன்னகை: 6

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00



## செய்திகளும் தகவல்களும்

# பயங்கர பூகம்பம்




மகாராஷ்டிர மாநிலம் கணேச சதுர்த்தியை இந்த ஆண்டிலும் விமரிசையாகவே கொண்டாடியது. செப்டம்பர் 29ந்தேதி மாலை இம் மாநிலத்தில் லட்டூர் மாவட்டத்தில் கில்லாரி கிராம மக்களும், இந்த விழாவைக் கொண்டாடி விட்டு இரவில் களைத்துப் போய் தம் இல்லங்களில் படுத்து மெய் மறந்து உறங்கிக் கொண்டிருந்தர்கள். சிலர் மட்டும் வீடுகளின் வெளியே போய் சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அன்று விடியற்காலை நான்கு மணிக்கு ஒரு சில விநாடிகளுக்கே அப்பகுதியில் நில நடுக்கம் ஏற்பட்டது. அப்பகுதியில் ஐம்பது கிராமங்களும் இரண்டு நகரங்களும் தரைமட்டமாயின. வீடுகள் இடிந்து விழ, அந்த இடிபாட்டில் சிக்கி ஆயிரக்கணக்கில மக்கள் மாண்டு போயினர். வீட்டைவிட்டு வெளியில் இருந்தவர்களே உயிர் தப்பினார்கள்.

விந்திய மலைக்குத் தெற்கேயுள்ள சில மாநிலங்களில் இந்த நில நடுக்கம் 6.5 சக்தியானது என்று வல்லுனர்கள் கருதுகிறார்கள். பூகம்பம் மிகச் சக்தி வாய்ந்ததாக இல்லாது போயினும் உயிர்ச் சேதம் ஏராளம். சுமார் முப்பதாயிரம் பேர்களுக்கு மேலாக இறந்திருப்பார்கள் என்றும் லட்சம் பேர்களுக்கு பாதிப்பு ஏற்பட்டிருக்கும் என்றும் முதலில் கணிக்கப்பட்ட மதிப்பீடு கூறுகிறது. எல்லா வீடுகளும் மண் சுவர்களையும் ஓட்டுக் கூரைகளையும் கொண்டிருந்ததால் நில நடுக்கத்தால் அவை எளிதில் இடிந்து நொறுங்கிப் போயின. ஒரு ஆலயம்

இடிந்து தரைமட்டமாகியும் அதிலிருந்த விநாயகர் சிலைக்கு ஒரு சேதமும் ஏற்படவில்லையாம்!

மகாராஷ்டிரத்தில் 1967 கோய்னா அணைப் பக்கம் 6.5 சக்தி கொண்ட நில நடுக்கம் ஏற்பட்டபோது இருநூறு பேர்கள் இறந்தனர். 1991ல் உத்தரப் பிரதேசத்தில் உத்தர காசிப் பகுதியில் ஏற்பட்ட நில நடுக்கத்தில் இரண்டாயிரம் பேர்கள் இறந்தனர். எண்பதாயிரம் பேர்கள் பாதிக்கப்பட்டார்கள். இதற்கு முன் கில்லாரிப் பகுதியில் 125 முறைகள் இலேசான நிலநடுக்கம் ஏற்பட்டது. ஆனால் இப்படிப் பட்ட பயங்கர பூகம்பம் வரும் என யாரும் நினைக்கக்கூட இல்லை. இதன் விளைவுதான் எவ்வளவு கொடூரம்!

இந்த பூகம்பத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவ எல்லோரும் கில்லாரிக்கு வந்தனர். இடிபாடுகளில் அடிபட்டு இறந்தோரின் உடல்களை வெளியே எடுத்தனர். பணம், பொருள், மருத்துவம் என்று பலவகை உதவிகளைப் பல சமூக சேவை அமைப்புகள் செய்யலாயின. அரசாங்கமும் தாராளமாக நிதி ஒதுக்கி மறுவாழ்வுத் திட்டங்களை வகுத்து செயலாக்கி வருகிறது. நம் நாட்டிலிருந்து மட்டுமல்லாமல் வெளி நாடுகளிலிருந்தும் உதவி கிடைத்து வருகிறது.

பூகம்பம் ஏற்படப் பல காரணங்களைக் கூறுகிறார்கள். நிலத்தடி நீர்தானே வற்றிப்போய் நிலம் வெடிப்பதாக ஒரு சாரார் கூறுகிறார்கள். வேறு சிலரோ மக்கள் நிலத்தடி நீரைத் தம் உபயோகத்துக்காக எடுத்துவிடுவதால் இது ஏற்படுகிறது என்கிறார்கள். ஆனால் யாராலும் பூகம்பம் எப்போது ஏற்படும் என்பதை மட்டும் கூற முடியவில்லை.

அமெரிக்காவை சேர்ந்த சார்லஸ் ரிக்டர் என்ற புவி இயல் வல்லுநர் கண்டுபிடித்த ரிக்டர் ஸ்கேல் (1-10)தான் தற்போது நடைமுறையில் உள்ளது. இதற்கு முன் இத்தாலிய வல்லுநர் கிளெஸ்ஸி மெர்காலியின் முறையைத்தான் உபயோகித்தார்கள்.

## நம் நாட்டில் பெரும் பூகம்பங்கள்

* 1737 அக்டோபர் 11ல் கல்கத்தாவில் 3 லட்சம்பேர் இறந்தனர்.
* 1934 ஜனவரி 15ல் இந்திய நேபாள எல்லையில் 10,000 பேர்
* 1935 மே 31ல் க்வெட்டா (தற்போது பாகிஸ்தானில்) 30,000 பேர் மரணம்.
* 1941 ஜூன் 26ல் அந்தமான் தீவில்
* 1950 ஆகஸ்ட் அஸ்ஸாம்

### உலகில்

* மிகப் பயங்கர பூகம்பம் கி.பி. 1201ல் கிழக்கு மத்திய தரைக் கடல் பகுதி நிலப்பரப்பில் ஏற்பட்டதாம். பதினோறு லட்சம்பேர் இறந்தார்களாம்.



# அதுவே உயர் செல்வம்

சிதம்பரம் தன் மாமனார் ஊருக்குப் போய்த் தன் மனைவியையும் அப்போதே அவள் பெற்ற குழந்தையையும் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தான். அவன் தன் வீட்டிற்குச் சற்று முன் ஒரு பெட்டி வண்டி நிற்பதையும் அதன் பட்டுத் திரையை விலக்கிக் கொண்டு ஒரு பணக்காரப் பெண் மணி ஏறி அமர்வதையும் கண்டான். அது யார் என யோசித்து நடக்கையில் அவன் தாயாரே அப் பெண்மணியை வழி அனுப்பி வைத்ததையும் அந்த வண்டியும் அங்கிருந்து வேகமாகச் சென்றதையும் கண்டான்.

வீட்டை அடைந்த அவன் தன் தாயாரிடம் "வந்தது யாரம்மா? பெரிய பணக்காரி போலிருக்கிறதே. உனக்கு இப்படியொரு பணக்காரி சினேகிதி இருக்கிறாள் என்பது இன்றுதான் எனக்குத் தெரிந்தது." என்று கேட்டான்.

அவனது தாயார் லட்சுமி திடுக்கிட்டு "ஓ! அதுவா! என்னோடு பள்ளியில் படித்தவள். அவள் மகனுக்குக் கல்யாணமாம், விவாக தினத்திற்கு நான்கு நாட்களுக்கு முன்பே நாம் வந்துவிட வேண்டும் என்று அழைத்துவிட்டுப் போனாள். நாமும் அத்திருமணத்திற்குப் போகலாம்" என்றாள்.

சிதம்பரமும் "அம்மா! இந்தப் பணக்காரர்கள் வீட்டில் எல்லாம் நம்மை மதிக்க மாட்டார்கள். நான்கு நாட்களுக்கு முன்பே ஒன்றும் போக வேண்டாம். அதனால் கூப்பிட்டதற்காக முகூர்த்தத்தின்போது மட்டும் தலையைக் காட்டிவிட்டு வந்துவிடலாம்" என்றான்.

லட்சுமியோ "என் சிநேகிதி

—சிவனார் செல்வன்—

சியாமளா சாதாரண நிலையில் இருந்தவளே. இப்போதுதான் பணக்காரி. ஆனாலும் என்னை மறக்கவில்லை. அதனால்தான் நேரில் வந்து கூப்பிட்டுப் போனாள் எனவே நாம் போகத் தான் வேண்டும்'' என்றான்.

சிதம்பரம் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன் சிறு வயதிலேயே தன் தந்தையை இழந்துவிட்டான். எட்டு வயதான அவன் தன் தாய்க்கு ஆதரவாக இருந்து இளநீர் விற்றுப் பணம் சம்பாதித்து வந்தான். அவன் தாய் பல வீடுகளில் வீட்டு வேலை செய்து பணம் சம்பாதிக்க அவர்கள் வாழ்க்கை நன்கு நடந்தது. முடிவில் அவன் பணத்தைச் சிறுக சிறுகச் சேர்த்துவிட்டு ஒரு சிறு வீட்டையும் வாங்கிவிட்டான்.

சிதம்பரம் அந்தப் பணக்கார வீட்டுக் கல்யாணத்திற்கு முதல் நாள் தான் தன்தாயுடன் கிளம்பினான். அப்போது அவனது தாய் புதிதாய் வாங்கிய கைத்தறி வேஷ்டியை எடுத்துப் பைக்குள் வைக்கவே சிதம்பரமும் ''இதை வாங்கினது வீண் செலவு. அந்த வீட்டில் நீ இதைக் கொடுத்தால் யாரும் மதிக்காமல் கேலிதான் செய்வார்கள். நீயே பார்க்கப் போகிறாய்'' என்றான்.

லட்சுமி ஒன்றும் சொல்லவில்லை. அவர்கள் கல்யாண வீட்டை அடைந்தபோது அங்கு எல்லோரும் சரிகை வேஷ்டிகளும்



பட்டுப் புடவைகளும் கட்டியவர் களாகத்தான் இருந்தார்கள். எளிய நூலாடைகளை அணிந்து சென்ற சிதம்பரத்தையும் அவன் தாயை யும் வாருங்கள் என்று அழைக் கக்கூட யாருமே இல்லை.

லட்சுமி சியாமளா எங்கு இருக் கிறாள் என்று விசாரித்து சிதம் பரத்துடன் அவள் இருக்கும் அறைக்குள் சென்றாள். லட்சுமி யைக் கண்டதும் சியாமளா எழுந்து ஓடி வந்து "வந்தாயா லட்சுமி! ரொம்ப சந்தோஷம்" என்று அன்புடன் கையைப் பற்றிக் கொண்டு கேட்டாள்.

லட்சுமியும் "எங்கே உன் மகன்?" எனவே சியாமளா அவளை யும் சிதம்பரத்தையும அழைத்துக் கொண்டு தன் மகன் இருக்கும் அறைக்குச் சென்றாள். பணக்கார நண்பர்களோடு இருந்த அவன் தன் தாயார் வருவதைப் பார்த்து "என் னம்மா இது! நான் என் நண்பர்களோடு இருக்கையில் நீ வந்து என்னைத் தொந்தரவு செய்யக் கூடாது என்று எவ்வளவு தடவை சொல்லி இருக்கிறேன்" என்று எரிந்து விழுந்தான்.

சியாமளாவும் "இல்லை பாலு! என் வெகுநாள் சிநேகிதி உன்னைப் பார்க்க வேண்டும் என்றாள். அதனால் அவளை அழைத்து வந்தேன்" என்றாள். பாலுவோ "உனக்குத் தெருவில் போகிறவர்கள் வருகிறவர்கள் எல்லாம் சிநேகிதிகளே!" எனக்





கூறி லட்சுமியை ஏளனமாகப் பார்த்தான்.

லட்சுமியோ அதைப் பொருட் படுத்தாமல் தான் கொண்டு வந்த கைத்தறி வேஷ்டியை அவனிடம் கொடுத்து "இது உனக்கு என் பரிசு" என்றாள். அவனோ அதனை வாங்கி "இதெல்லாம் எங்கள் வீட்டு வேலைக்காரர்கள் அணி வது" எனக் கூறி எதிரே கைகட்டி நின்ற ஒரு வேலையாளுக்குக் கொடுத்துவிட்டான்.

லட்சுமியும் சியாமளாவும் திகைத்து நின்றனர். அவர்கள் எது வும் பேசாமல் தலை குனிந்த படியே சிதம்பரத்துடன் அந்த அறையிலிருந்து வெளியே வந் தார்கள். சிதம்பரம் வந்த கோ பத்தை அடக்கிக் கொண்டான்.

விவாகம் சற்றுத் தள்ளி இருந்த பெண் வீட்டில்தான் நடந் தது. பெண் பார்க்க அவலட்சண மாக இருந்தாள். அது பற்றி பாலு விடம் அவனது நண்பர்கள் கேட்கவே அருகில் சியாமளாவும் லட்சுமியும் இருப்பதைக்கூட லட் சியம் செய்யாமல் பாலு" என்ன செய்வது? எல்லாம் என் தலை விதி. இப்போது என் வியாபாரம் நஷ்டத்தில் நடந்து கொண்டிருக் கிறது. அதற்கு ஐந்து லட்சம் தேவை. இந்தப் பெண்ணின் தகப் பனார் அந்தத் தொகையை வரதட்சணையாகக் கொடுப்ப தாகக் கூறவே இதற்குச் சம்மதித் தேன். இந்த சம்மதம் தெரிவித்த மறுநாளே இன்னொரு வியாபாரி தன் குருட்டு மகளை எனக்கு கொடுப்பதாயும் எட்டு லட்சம் வரதட்சணை கொடுப்பதாயும் கூறினார். ஆனால் என்ன செய்ய முடியும்? இப்போது இதிலும் எனக்கு மூன்று லட்சம் நஷ்டம்" என்றான்.

இதைக் கேட்ட சிதம்பரம் மலைத் துப் போனான். லட்சுமியின் கண் களிலோ நீர் நிறைந்தது. அப் போதே சிதம்பரம் ஒரு வாடகை வண்டியை அமர்த்திக் கொண்டு தன் தாயாருடன் தன் ஊருக்குக் கிளம்பிவிட்டான். தன் தாயார்

அடிக்கடி கண்களைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொள் வதைக் கண்ட சிதம்பரம் "ஏனம் மா வருத்தப்படுகிறாய்? அந்த பாலு சொன்னதை நினைத்தா கண்ணீர் சிந்துகிறாய்! அவன் பணத் திமிரில் ஏதோ உளறி னான். அதை விட்டுத் தள்ளு" என்றான்.

அப்போது லட்சுமி "அந்த பாலு யார் தெரியுமா?" என்று கேட்கவே சிதம்பரமும் ஆச்சரியத் துடன் "தெரியாதே! யாரம்மா அவன்? அவன் உன் சிநேகிதி சியாமளாவின் மகன்தானே" என்று கேட்டான்.



லட்சுமியும் "இல்லையப்பா. அவன் உன் தம்பி. இவ்வளவு நாட்களாக மறைந்து வைத்த ரக சியத்தை இப்போதே கூறுகிறேன். என்று கூறி சொல்லலானாள்.

"உன் தந்தை இறந்த பிறகு நான் பல வீடுகளில் வேலை செய்தேன். நீ தெருத்தெருவாக அலைந்து இளநீர் விற்று வந்தாய். அப்போது உன் தம்பி சிறு குழந்தை. அப்போது ஒருநாள் சியாமளா ஒரு வண்டியில் இந்த ஊருக்கு வந்தாள். அவள் திடீ ரென மயங்கி வண்டிக்குள் நினை விழந்து விழவே அந்த வண்டிக் காரன் வண்டியை நம் குடிசை முன் நிறுத்தி உதவி கோரினான். அப்போது நீ மத்தியான சாப் பாட்டிற்கு வந்தாய். சியாமளா நினைவு இழந்து விழுந்திருப்பது கண்டு நீ ஒரு இளநீர் காயை எடுத்துச் சீவி இளநீரை அவளது முகத்தில் தெளித்தாய். இன் னொரு இளநீர் காயை வெட்டி அவளைக் குடிக்கச் செய்தாய். அவள் மாலையாகும்வரை நம் குடிசையில் இருந்து இளைப்பாறி னாள். அவள் உன்னை தெய்வம் என்று போற்றிப் புகழ்ந்தாள்.

அவள் கிளம்புமுன் "அம்மா! எனக்குக் குழந்தையே இல்லை. நீயோ மிகவும் சிரம திசையில் இருப்பது தெரிகிறது. உன் மகனை சுவீகாரம் எடுத்துக் கொள்கி றேன். என்ன சொல்கிறாய்? நான்

கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவள்'' எனக் கூறித் தன் பெயரையும் முகவரியையும் கூறினாள்.

"நான் சற்று யோசித்து "அம்மா! நானும் இரு மகன்களை வளர்க்கச் சிரமப்படுவது உண்மையே. என் மூத்த மகன் சிதம்பரம் எனக்கு உதவியாக இருக்கிறான். அவனைக் கொடுக்க முடியாது. வேண்டுமானால் - குழந்தை பாலுவை எடுத்துக் கொள்ளுங்கள்.'' என்றேன்.

சியாமளாவும் ''இதுவும் சரியே. இக் குழந்தையை இப்போது எடுத்து வளர்த்தால் இவன் என்னையே தன் தாயாக எண்ணி வளர்வான். ஆனால் இனி நீ இவனைப் பார்க்கக் கூடாது. இவன் பெரியவனாகி இவனுக்குக் கல்யாணம் நடக்கும்போது நீ வந்து பார்த்துவிட்டுப் போகலாம்'' என்றாள். பாலு சுகப்படட்டும் என்று எண்ணி அவனை சியாமளாவிடம் ஒப்படைத்தேன். ஊராரிடம் பாலு திருவிழாவின்போது காணாமல் போய்விட்டதாகக் கூறினேன். அந்த பாலுதான் இவன். உன்னை அன்று சியாமளாவிடம் கொடுத்திருந்தால் நீ இன்று பணக்கார வீட்டுப் பிள்ளையாக இருந்திருப்பாய்.''

இவ்வாறு லட்சுமி கூறியதும் சிதம்பரம் ''அம்மா. உலகில் பணம் இருந்துவிட்டால் மட்டும் சுகம் கிடைத்துவிடாது. திருப்தி இருக்க வேண்டும். பாலுவைப் பார்! வரதட்சணை வேண்டும் என்று ஆசைப்படுகிறான். அது மேலும் அதிகமாக கிடைக்கவில்லையே என்று மனம் ஒடிந்து போகிறான். அவனுக்குப் பணம் இருந்தும் திருப்தி இல்லை. நாம் உள்ளதைக் கொண்டு திருப்தி அடைந்து வருகிறோம். இதுவே நமக்குக் கிடைத்துள்ள அரிய செல்வம்'' என்றான்.

அதுகேட்டு லட்சுமி பூரித்துப் போனாள்.






8

*[அதிசய மலருடன் உத்தமன் கடலில் படகில் சென்றபோது நடுநிசியில் ராட்சல மிருகத்தைக் கண்டான். அவன் எங்காவது கரை இறங்க நினைக்கையில் ஒரு பெரிய அலை அடித்து அவனது படகைப் பாறைகளுக்கு மத்தியில் தள்ளியது. அவன் தூங்கிக் கொண்டிருக் கையில் சில மலைச் சாதிப் பெண்கள் அதிசய மலர்களை எல்லாம் எடுத்துக் கொண்டு தம் குடி இருப்பிற்குச் சென்றனர். உத்தமனும் அவர்கள் பின்னால் சென்றான். அப்போது —]*

அந்த மலைச் சாதியினரின் தலைவன் காயாம்பு உத்தமனிடம் "சாங்காய்ப் பகுதியிலிருந்து வெகு தூரம் பயணம் செய்து இங்கு நீ வந்த காரணம் என்னவோ?" என்று கேட்டான்.

உத்தமனும் தனக்கு விரிக்கப் பட்ட பாயின்மீது அமர்ந்தவாறே "நான் மாணிக்கபுரியின் தென் கரையிலிருந்து நேற்று மாலைப் படகில் புறப்பட்டேன். காலை யில் ஒரு அலை என்னை ஓரிடத் தில் தள்ளியது. இதுதான் நான் இங்கு வந்த விதம்" என்றான். இச்சமயம் ஒரு நடு வயது பெண் மணி இரு பாத்திரங்களில் அவர் கள் குடிக்க பானத்தை வைத்து விட்டுப் போனாள்.

காயாம்பு அவற்றில் ஒன்றை எடுத்துக் குடித்தவாறே "நீயும்



குடி. இது எங்கள் வீட்டில் தயாரித்த சிறப்புப் பானம்'' என்றான். உத்தமனும் ''நான் இங்கே வந்த போதே குடித்தேன்'' என்றான். காயாம்புவும் ''இங்கே குடித்தாயா? யார் கொடுத்தார்கள்?'' என்று கேட்டான்.

உத்தமனும் ''நான் அலையால் கரையில் ஒதுக்கப்பட்டபோது அயர்ந்து தூங்கிவிட்டேன். அப்போது சில பெண்கள் நான் படகில் ஏற்றி வந்த அதிசய மலர்களை எல்லாம் எடுத்துக் கொள்ளவே, அவர்களை அவற்றைத் திருப்பிக் கொடுக்கும்படிக் கேட்ட போது அவர்களோ கொடுக்க முடியாது என இங்கே வரவே நானும் அவர்களைத் தொடர்ந்து இங்கு வந்துவிட்டேன்'' என்றான்.

இதற்குள் முன்பு பானம் கொண்டு வந்து வைத்த பெண்மணி கையில் ஒரு கட்டு அதிசய மலர்களை எடுத்து வந்து காயாம்புவிடம் காட்டி ''இதை நம் மகள் கொண்டு வந்திருக்கிறாள். பார்க்க எவ்வளவு அழகாக இருக்கிறது.?'' என்றாள்.

காயாம்புவும் ''அழகோடு நறுமணமும் வீசுகிறது. ஆனால் இவை இந்த இளைஞனுடையதே. இதை ஏன் எடுத்து வந்தாள்? ஒருவர் பொருளை அவரது அனுமதி இல்லாமல் எடுத்துக் கொள்வது சரியா?'' என்று கேட் டான்.

இதற்கு அந்தப் பெண்மணி எவ்வித பதிலும் கூறாமல் வீட்டினுள் சென்றுவிட்டாள். அவர்கள் பேசிய மொழி உத்தமனுக்குப் புரியவில்லையாயினும் அது என்னவாக இருக்கும் என்பதை அவன் ஊகித்துவிட்டான்.

உத்தமன் ''இவற்றை அதிசய மலர்கள் என நாங்கள் கூறி வருகிறோம். இவை நூறு ஆண்டுகளுக்கு ஒருமுறை தான் மலரும். இவற்றை நான் ஒரு முக்கியமான வேலையை ஏற்றுக் கொண்டு எடுத்துப் போய்க் கொண்டிருக்கிறேன்.'' என்றான்.

காயாம்புவும் ''ஓ அப்படியா!

நீ இப்போது நாகபுரம் என்ற நாட்டில் இருக்கிறாய். இது உன் மாணிக்க புரயின் அருகே உள்ள நாடே. இங்கிருந்து நீ எங்கே போக வேண்டும்? இந்த மலர்களை எடுத்துச் செல்ல வேண்டும் என்கிறாயே. அதற்குள் அவை வாடிவிடாதா? என்று கேட்டான்.

உத்தமனும் தன்னிடமிருந்து விஷயத்தைக் கறக்க காயாம்பு இக்கேள்விகளை கேட்கிறான் என்று புரிந்து கொண்டுவிட்டான். அதனால் அதை மறைக்காமல் விளக்கமாகத் தன் பயணத்தைப் பற்றிக் கூறினான்.

அதைக் கேட்ட காயாம்பு "ராட்சஸ மிருகத்தை நடுக்கடலில் சந்திக்க நீ மேற் கொண்டுள்ள முயற்சியை நான் பாராட்டுகிறேன். நீ உன் நாட்டை ஆபத்திலிருந்து காக்கத் துணிச்சலுடன் செயல்பட்டு வருகிறாய். உன் மாதிரி இளைஞர்கள் ஒவ்வொரு நாட்டிற்கும் தேவை அந்த ராட்சஸ மிருகத்தால் எங்கள் நாட்டிற்கு எவ்வித ஆபத்தும் நேர்ந்து விடாது. ஏனெனில் எங்கள் நாட்டைச் சுற்றி உயர்ந்த மலைகள் உள்ளன. அவை எதிரிகளிடமிருந்து எங்களை காக்கின்றன. அதனால் நாங்கள் கவலை இல்லாமல் சுகமாய் வாழ்கிறோம்" என்றான்.

உத்தமனும் "நீங்கள் கூறுவது



சரியே. நீங்கள் கடலிலிருந்து தள்ளி வெகு தொலைவில் மலைகளுக்கு மத்தியில் இருக்கிறீர்கள். எங்கள் நாடோ நீண்ட கடற்கரையைக் கொண்டது. அதனால்தான் அந்த ராட்சஸ மிருகம் கடற்கரை ஓரமாய் கடும் சேதத்தை விளைவித்து வருகிறது. எனவே அதனை அடக்க இந்த மலர்களின் உதவியை நாடுவதைத் தவிர வேறு வழியே இல்லை" என்றான்.

காயாம்புவும் "இந்த மலர்கள் நூறாண்டிற்கு ஒருமுறை தான் பூத்துத் தொங்குவதாகக் கூறினாயே. அதனால் ராட்சஸ மிருகம் இனி இம்மலர்களுக்காக வராமலேயே இருந்துவிடலாம் அல்லவா?"



போய் மன்னர் மகேந்திர சிம்ம ரைக் காணலாம்.'' என்று கூறி உட்புறக் கதவைத் தட்டினான். முன்பு வந்த பெண்மணி வரவே அவளிடம் ஏதோ கூறினான்.

அவள் சற்று நேரத்தில் இருவ ரும் சாப்பிட உணவு கொண்டு வந்தாள். அவளோடு இளம் பெண் ஒருத்தியும் வந்தாள். இவர்கள் உணவுப் பாத்திரங்களை வைத்து விட்டு உள்ளே போகும்போது காயாம்பு ''சித்ரா! இங்கே வா'' என்று அழைத்தான். அந்த இளம் பெண்ணும் அவனருகே வந்து நின்றாள்.

அவன் உத்தமனிடம் ''இவள் தான் என் மகள் சித்ரா'' என்று அறிமுகப்படுத்திவிட்டு அவளி டம் ''உன் மற்ற தோழிகள் எங்கே? என்று கேட்டாள். அவளும் கத வின் பக்கம் போய் சைகை செய் யவே உள்ளே இருந்து ஐந்து பெண்கள் வந்து நின்றார்கள்.

காயாம்பு உத்தமனிடம் ''இவர்க ளெல்லாம் சித்ராவின் சினேகிதி கள்'' என்று சொல்லி அவர்களி டம் ''ஆமாம்! இந்த மலர்களை எல்லாம் நீங்கள் ஏன் எடுத்து வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

அவர்கள் தயங்கியவாறே ''இவை அழகாயும் மணம் உள் ளனவாயும் இருக்கவே நாங்கள் இவற்றை எடுத்து வந்தோம்'' என் றார்கள். காயாம்புவும் ''சரி,

என்று கூறினான். உத்தமனும் ''ஆம்! இம் மலர்கள் மலராவிட் டால் ராட்சஸ மிருகம் வராமல் இருந்துவிடலாம். ஆனால் அதை எங்கள் நாட்டின் அருகே இருக்க விடாமல் வெகு தூரத்திற்கு விரட்டிவிடுவதே என் நோக்கம்'' என்றான்.

காயாம்புவும் ''உன் நோக்கம் உயர்ந்ததே. அந்த மிருகம் உன் நாட்டிற்குள் வராமலே இருக்க வேறு ஏதாவது வழி உள்ளதா என்று யோசித்தாயா? இதுபற்றி எங்கள் நாட்டு மன்னருடன் பேசி யோசித்தால் ஒருவழி காணலாம் என நான் எண்ணுகிறேன். நாம் சாப்பிட்டுவிட்டுக் கிளம்பிப்

சரி, நீங்கள் போகலாம்'' எனவே அவர்கள் உள்ளே போய்விட்டார்கள்.

சாப்பிட்டு முடிந்ததும் காயாம்பு உத்தமனை அழைத்துக் கொண்டு கிளம்பினான். அவர்களை வழி அனுப்ப வாசல் வரை காயாம்புவின் மனைவியும் மகளும் வந்தார்கள். அந்தக் குடியிருப்பைத் தாண்டியதும் காயாம்பு தான் எடுத்து வந்த அதிசய மலர்க் கட்டை உத்தமனிடம் கொடுத்து ''இதை நீயே எடுத்து வா'' என்றான். உத்தமனும் அதனை வாங்கிக் கொண்டு அவன் பின்னால் நடந்து சென்றான்.

அவர்கள் நடந்தவாறே பல மேடு பள்ளங்களைக் கடந்து சென்றனர். கடைசியில் ஒரு குன்றருகே உள்ள நாகபுரத்தை அவர்கள் அடைந்தார்கள். தலை நகர வீதிகளில் அவர்கள் செல்கையில் அந்த நகரவாசிகள் காயாம்புவை பயபக்தியுடன் வணங்கினார்கள். ஓரமாக ஒதுங்கி வழி விட்டார்கள். கட்டுமஸ்தான உடலும் கம்பீரமான தோற்றமும் கொண்டு தலையில் சிறிய நாகப் பாம்பு வடிவிலான கிரீடத்தை அணிந்து காயாம்பு கையில் ஈட்டியுடன் நடந்து சென்றபோது அவன் எதிரே வந்தவர்கள் எல்லாம் நடுநடுங்கி வழிவிடுவதை உத்தமன் கண்டான்.



அவர்கள் அரண்மனை வாசலை அடைந்தபோது அங்கு நின்ற காவலாளிகள் காயம்புவைப் பணிவுடன் வணங்கி உள்ளே செல்ல வழிவிட்டார்கள். ஒரு வீரன் வழி காட்டி அவர்கள் இருவரையும் உள்ளே அழைத்துச் சென்றான். இருபுறமும் உயர்ந்த தூண்களருகே நின்ற காவல் வீரர்கள் காயாம்புவைக் கண்டதும் பணிவுடன் வணங்கினார்கள்.

அவர்களை அழைத்துச் சென்ற வீரன் அவர்களை ஓரிடத்தில் நிற்கவைத்து விட்டு அவன் மட்டும் முன்னதாக மன்னன் இருக்கும் இடத்திற்குப் போய் காயாம்பு




வந்திருப்பதைக் கூறினான். மன்னனும் அவனை அழைத்து வரும்படிக் கூறவே அந்த வீரன் வந்து அவர்கள் இருவரையும் மன்னனிடம் அழைத்துச் சென்றான்.

மன்னன் உயரிய அரியாசனத்தில் அமர்ந்து தன் அமைச்சர்களுடன் ஏதோ ஆலோசனை புரிந்து கொண்டிருந்தான். காயாம்பு மன்னனைக் கண்டதும் இருகைகளையும் கூப்பி வணங்கினான். மன்னனும் "காயாம்பு வா. வா. வா. எப்படி இருக்கிறாய்? உன் கூட்டத்தவர் நலந்தானே?" என்று பரிவுடன் விசாரித்தான்.

காயாம்புவும் "தங்கள் தயவால் யாவரும் நலமே. இந்த வாலிபன் மாணிக்கபுரியிலிருந்து வந்திருக்கிறான். உத்தமன் என்பது இவன் பெயர்" என்றான். மன்னனும் "அப்படியா! உத்தமா! உங்கள் நாட்டு மன்னர் பிரதாப வர்மர் எப்படி இருக்கிறாய்?" என்று கேட்டான்.

உத்தமனும் மன்னனை வணங்கியவாறே "நலமாகவே இருக்கிறார் அரசே" என்றான். மன்னனும் அவர்கள் இருவரையும் ஆசனங்களில் அமரச் சொன்னான். அப்போது காயாம்பு "உத்தமன் வந்ததே ஒரு பெருங் கதைதான்." எனக் கூறி அவன் வைத்திருந்த மலரை வாங்கி மன்னன் முன் வைத்தான்.

மன்னனும் "நீங்கள் இருவரும் வரும்போதே நறுமணம் வீசுவதை உணர்ந்தேன். அது இம்மலரிலிருந்துதானா?" என்று கேட்டான். காயாம்புவும் "ஆம். அரசே. சிங்காய் மலையிலிருந்து இவற்றை உத்தமன் கொண்டு வந்திருக்கிறான். இது நூறு வருடத்திற்கு ஒரு முறை மலரும் அதிசய மலர். இதால் மாணிக்கபுரிக்கே ஆபத்து வந்திருக்கிறது" எனக் கூறி ராட்சஸ மிருகம் பற்றியும் அதைத் தேடிகொண்டு உத்தமன் வந்துள்ளதையும் விவரமாகக் கூறினான்.

மன்னனும் "சபாஷ்! தன் நாட்டு மக்களுக்கு சேவை செய்ய முன் வந்துள்ள உத்தமனைப் பாராட்டு

கிறேன். அவன் அந்த மிருகத்தை அடக்கத் தனியாகப் போகக் கூடாது. நம் வீரர்களில் சிலரை இவனுடன் அனுப்புகிறேன்'' என்றான்.

இச்சமயத்தில் பதினைந்து வயதுள்ள இளம் மங்கை ஒருத்தி ஓடி வந்து ''அப்பா! இந்த மலர் ஏது? மிக அழகாக இருக்கிறதே. எனக்குத் தானே இது'' என்று கேட்டாள். மன்னனும் ''இதை இந்த இளைஞன் மாணிக்க புரியிலிருந்து கொண்டு வந்திருக்கிறான்'' என்றான். உத்தமனும் "இளவரசியே! இதை தாங்கள் எடுத்துக் கொள்ளலாம்'' என்றான்.

இளவரசி மல்லிகாவும் "அப்பா! இதை நான் எடுத்துக் கொண்டு போகிறேன்'' எனக் கூறி அம்மலர்களை எடுத்துக் கொண்டு போய்விட்டாள். அவள் போன பின் மன்னன் "இந்த மலருக்குள்ள சாபம் பற்றி யாரும் மல்லிகாவிடம் கூறிவிட வேண்டாம்'' என்று கூறிச் சற்று யோசித்தான்.

அவன் காயாம்புவிடம் ''நீங்கள் இருவரும் இன்றிரவு இங்கே தங்கி இளைப்பாறுங்கள் நாளை நாம் இனி என்ன செய்யலாம் என்று யோசிக்கலாம்'' என்று கூறிவிட்டு எழுந்து சென்றான். ஒரு அமைச்சர் அவர்களை ஒரு வசதியான பெரிய அறைக்குக் கொண்டுபோய்விட்டு ''இங்கு இளைப்பாறுங்கள். உங்களுக்கு வேண்டியதைச் செய்யப் பணியாட்கள் தயாராக இருக்கிறார்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

அமைச்சர் போன சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு வீரன் வந்து ''அதிசய மலர் கொண்டு வந்தவரை இளவசரியார் அழைத்து வரச் சொன்னார்'' என்றான். உத்தமன் ஆச்சரியப்பட்டவனாய் காயாம்புவைப் பார்க்கவே அவனும் ''நீ போய் வா. ஆனால் மன்னர் சொன்னதை மட்டும் நினைவில் வைத்துக் கொள்'' என்று எச்சரித்து அனுப்பினான். (தொடரும்






# மனிதனும் குரங்கும்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடு ராத்திரியில் துணிவுடன் இப்படி முயல்கிறாயே. உன்னை யாராவது ஒரு மன்னன் இவ்வாறு செய்யத் தூண்டினானா? சில சமயங்களில் மன்னர்களும் நீதிபதிகளும் எடுக்கும் முடிவுகள் சரியானவையாக இல்லாதும் போகலாம். உனக்கு சிரமம் தெரியாமல் இருக்க ஒரு கதை கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறி கதை சொல்லாயிற்று.

கமலாபுர நாட்டில் சூரப்பன் என்ற விவசாயி இருந்தான். அவ

## வேதாளம் சொல்லும் கதை



னது மகன் ராமய்யன் அவனுக்கு இசை என்றால் மிகவும் விருப்பம் அவன் சிறு வயதிலேயே இனிமையாகப் பாடினான். இசையில் நல்ல பயிற்சி பெற்று இசைத் துறையில் வித்வானாகிப் பேரும் புகழும் பெற வேண்டும் என்ற ஆசை. ஆனால் அவன் தகப்பனோ அவனை விவசாயத்தில் ஈடுபடுத்த எண்ணினான். இசையால் எந்த லாபமும் இல்லை என்பதும் விவசாயத்தால் பயிர் விளைவித்து பணம் சம்பாதிக்க முடியும் என்பது அவன் எண்ணம்.

ராமய்யனுக்கோ விவசாயத்தில் மனம் செல்வில்லை. தான் சங்கீதம் கற்றுக் கொள்ளப் போவதாக அவன் சூரப்பனிடம் கூறினான். சூரப்பனோ அது நடக்காது எனவே ராமய்யன் முரண்டு பிடித்தான். சூரப்பன் அவனை ஒரு அறையில் போட்டுப் பூட்டி இரண்டு நாட்கள் உண்ண எதுவும் கொடுக்காமல் பட்டினி போட்டான். முடிவில் ராமய்யன் தன் தந்தையின் விருப்பப்படியே நடப்பதாகக் கூறவே சூரப்பன் அவனை அறையிலிருந்து விடுதலை செய்து சாப்பாடு போட்டான்.

ராமய்யன் தன் தந்தையோடு முழு மூச்சுடன் விவசாயத்தில் ஈடுபட்டான். முதல் இரண்டு வருடங்களில் நல்ல விளைச்சலும் கண்டது. ஆனால் அடுத்த ஆண்டு மழையும் இல்லாமல் கடும் பஞ்சம் ஏற்படவே மக்கள் தம் ஊரை விட்டு வேறு ஊர்களுக்குச் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது.

சூரப்பனாலும் நிலைமையைச் சமாளிக்க முடிய்வில்லை. அவன் தான் பட்ட கடனுக்காக நிலங்களை இழக்க வேண்டியதாயிற்று. அவனும் தன் குடும்பத்தோடு ஊரைவிட்டு வெளியேறினான். அந்தக் குடும்பம் வழியில் ஒரு மரத்தடியே தங்கியது. அப்போது மரத்தின் மீதிருந்து ஒரு குரங்குக் குட்டி அவர்கள் இருந்த இடத்தில் விழுந்தது. சூரப்பன்

அந்தக் குரங்குக்குட்டியைத் தூக்கி தன்னோடு வைத்துக் கொண்டான்.

சூரப்பன் குடும்பம் பட்டணத்தை அடைந்தது. ஆனால் அவர்களுக்குத் தங்க இடமே கிடைக்காததால் ஒரு மரத்தடியே இருந்து காலம் கழிக்க வேண்டியதாயிற்று. ராமய்யன் பட்டணத்து வீதிகளில் திரிந்து மூட்டை தூக்கிக் கூலி பெற்று வரலானான். சூரப்பன் குரங்கிற்கு வித்தைகள் கற்றுக் கொடுக்கலானான். முதலில் குரங்கு அவன் சொன்னபடிக் கேட்கவில்லை. ஆனால் சூரப்பன் இரண்டு நாட்கள் அதனைப் பட்டினி போட்டான். அப்போது தான் அது அவன் சொன்னபடி எல்லாம் செய்தது.

சூரப்பன் பட்டணத்தில் பல இடங்களில் குரங்கைக் கொண்டு வித்தைகள் செய்வித்து சம்பாதிக்கலானான். அதில் அவனுக்கு ராமய்யனுக்குக் கிடைத்ததைவிட அதிகமாகக் கிடைத்தது.

அப்போது ராமய்யன் சூரப்பனிடம் "நான் பாட்டுப்பாட இந்தக் குரங்கு ஆடினால் இப்போது கிடைக்கும் காசுகளைப்போல பல மடங்கு கிடைக்கும்" என்றான். சூரப்பனும் அப்படியே செய்து பார்க்க ஒரு நாளுக்குச் சாதா





ரணமாகக் கிடைப்பதைவிடப் பத்து மடங்கு பணம் கிடைத்தது.

ஒருநாள் பட்டணத்துத் தெருவில் ராமய்யன் பாடி குரங்கு ஆடிக் கொண்டிருந்தபோது பிரபல சங்கீத வித்வான் பிச்சைய் யா அவ்வழியே வந்தார். அவர் ராமய்யனின் குரல் வளத்தையும் நயத்தையும் கேட்டு ராமய்யனைக் கூப்பிட்டு "உனக்கு நல்ல குரல் இருக்கிறது. இசையிலும் ஆர்வம் இருப்பதும் தெரிகிறது. இப்படிக் குரங்கிற்குப் பாடி உன் வாழ்நாளை வீணாக்காதே. இப்போதே என்னுடன் வா. நீ முறைப்படி சங்கீதம் கற்றுப் பேரும் புகழும் பணமும் பெற்று பெரிய சங்கீத வித்வானாகத் திகழலாம்" என்றார். ராமய்யனும் அப்போதே அவருடன் கிளம்பிச் செல்லத் தயாரானான். அது கண்டு சூரப்பன் ராமய்யனையும் பிச்சைய்யாவையும் திட்டினான். அவர்கள் அதை லட்சியம் செய்யாமல் சென்றனர்.

இதற்குப்பின் சூரப்பன் தன் குரங்கை வைத்து சம்பாதித்து கொண்டிருந்தான். இரண்டு மூன்று வருடங்களில் கொஞ்சம் பணம் சேரவே அவன் ஒரு குடிசையை வாங்கி அதில் வசித்து வரலானான்.

ஒருநாள் திடீரென சூரப்பனுக்கு ஒரு பெரும் பணக்காரரிடமிருந்து அவனது குரங்காட்டத்தைக் காண விரும்புவதாகவும் அவன் அவரது வீட்டிற்குத் தன் குரங்கோடு வர வேண்டும் என்றும் செய்தி வந்தது. அதற்கு ஆயிரம் வராகன்கள் கிடைக்கும் என்று அறிந்ததும் சூரப்பன் தன் குரங்கோடு அந்தப் பணக்காரரின் மாளிகைக்குச் சென்றான்.

அங்கு வேலைப்பாடுடன் கூடிய அழகான ஆசனத்தில் அம்மாளிகையின் சொந்தக்காரர் அமர்ந்திருந்தார். அந்தக் கூடத்தில் அவரையும் சூரப்பனையும் அவனது குரங்கையும் தவிர வேறு யாரும் இல்லை.

குரங்காட்டம் முடிந்ததும் அந்தப் பணக்காரர் ஆயிரம் வராகன்கள் அடங்கிய ஒரு மூட்டையை சூரப்பன் முன் விட்டெறிந்து "என்னை நீ இன்னமும் யாரென்று அறியவில்லையா? நான்தான் ராமய்யன். இந்த ஆயிரம் வராகன்களை எடுத்துக் கொண்டுபோய் சுகமாக வாழ்" என்று கூறினான்.

அப்போதுதான் சூரப்பனுக்கு அவன் தன் மகன் என்பது தெரிந்தது. அவன் "மகனே! நீ இவ்வளவு பெரிய பணக்காரனாக எப்படி ஆனாய்?" என்று ஆவலுடன் கேட்டான்.

ராமய்யனும் "என் ஆசிரியர் ஓராண்டு காலம் இசைப் பயிற்சி அளித்தார். அதன் பிறகு இந்நாட்டு மன்னரின் ஆதரவு கிட்டியது. இதுவரை எனக்கு இரண்டு கனகாபிஷேகங்கள் கூட என் ரசிகர்கள் செய்திருக்கிறார்கள். இப்போது என்னிடம் உள்ள சொத்து பத்து தலைமுறைக்கும் மேலாகச் செலவு செய்தாலும் குறையாது" என்றான்.

அப்போது சூரப்பன் "நீ இவ்வளவு பெரிய பணக்காரன் ஆன பிறகு நான் குரங்காட்டம் காட்டி இனிப் பிழைக்க வேண்டியதில்லை. இதை உன் தாயிடம் சொன்னால் எவ்வளவு சந்தோஷப்படுவாள்" என்று மகிழ்ச்சியுடன் கூறினான். அதற்கு ராமய்யன் "நீ எப்படி இருக்கப் போகிறாய் என்பது பற்றி எனக்குக் கவலை





இல்லை. நீயோ, என் தாயாரோ இந்த வீட்டு வாசற்படியைக்கூட மிதிக்கக் கூடாது. என் தாயாரைப் பார்க்க நான் ஆசைப்பட்டால் நானே அவள் இருக்கும் இடத்திற்கு வந்து பார்ப்பேன். என்னை நீங்கள் வளர்த்தற்காக இந்த ஆயிரம் வராகன்களைக் கொடுத்து என் கடனைத் தீர்த்துக் கொள்கிறேன். நான் விரும்பும்போது உங்களுக்குப் பண உதவியும் செய்கிறேன். ஆனால் நீயாக என்னிடம் கேட்கக் கூடாது. இனி நீ போகலாம்'' என்று கூறி அவன் தன் ஆசனத்திலிருந்து எழுந்து சென்றுவிட்டான்.

சூரப்பன் தன் வீட்டிற்குப் போய் தன் மனைவியிடம் நடந்ததைக் கூறினான். அதுகேட்டு அவள் கோபத்தோடு ''பெற்ற தாயையும், தந்தையையும் படி ஏற வேண்டாம் என்றா கூறினான்? நாம் போய் நீதிபதியிடம் நியாயம் கேட்போம்'' என்றாள்

அவர்கள் இருவரும் நீதிமன்றத்தில் நீதிபதியிடம் முறையிட்டனர். அவரும் ராமய்யனை வரவழைத்து விசாரித்து எல்லாம் தெரிந்து கொண்டார். அவர் முடிவில் ''ராமய்யன் தனக்கு சங்கீதம் கற்றுக் கொடுத்தவரைத் தன் தந்தையாக எண்ணி அவரை அவரது குடும்பத்தோடு தன் வீட்டில் வைத்துக் கொண்டான். அது முற்றிலும் சரியே. ஆனால் அவன்தன் பெற்றோர்களுக்கு ஆயிரம் வராகன்கள் கொடுத்து விட்டால் பொறுப்பு முடிந்துவிட்டது என நினைத்தது தவறு. அவன் அவர்களுக்கு தனக்குப் பதிலாக ஒரு குரங்குக் குட்டியைக் கொடுக்க வேண்டும்'' என்று தீர்ப்பு அளித்தார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! ஒரு மகனுக்குத் தன் தாய் தந்தையர்களை வைத்துக் காப்பாற்றுவதுதானே முதற் கடமை. ஆனால் ராமய்யன் அப்படிச் செய்யவில்லை. நீதிபதியும் அந்தப் பெற்றோர்களுக்கு ஒரு குரங்குக் குட்டியைக் கொடுத்தால்

சரி என்று தீர்ப்புக் கூறினாரே! இதெல்லாம் நியாயமா! இவற்றிற்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிடால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''மனிதனுக்கு மூளை இருப்பதால் மிருகங்களை விட உயர்ந்தவன். அதனால் மனிதர்கள் பல துறைகளில் சிறந்த விளங்குகிறார்கள். அவர்கள் தம் மக்களுக்கும் தக்கபடி கல்வி அளிக்கிறார்கள். சூரப்பன் அவ்வாறு செய்யாமல் தன் மகனை வயலில் வேலை செய்ய வைத்தான். தன் மகன் விரும்பிய இசையைக் கற்கவிடவில்லை. அவன் குரங்குக் குட்டியை பட்டினி போட்டு எப்படி வித்தைகளைச் செய்ய வைத்தானோ அதுபோல ராமய்யனைப் பட்டினி போட்டு விவசாயம் செய்ய வைத்தான். எங்கோ பிறந்த குரங்கு தான் சம்பாதித்ததைத் தன் தாய் தந்தையருக்குக் கொடுக்காமல் சூரப்பனுக்குக் கிடைக்கச் செய்தது. இதுபோல ராமய்யன் தனக்குப் பயிற்சி அளித்து முன்னுக்கு வரச் செய்த தன் குருவையும் அவரது மனைவியையும் தன் தாய் தந்தையர்களாகக் கருதித் தன்னோடு வைத்துக் கொண்டான். ராமய்யன் தன் பெற்றோரைவிட்டு வந்துவிட்டதால் அவனுக்கு பதிலாகக் குரங்குக் குட்டியை நீதிபதி கொடுக்கச் செய்தது சரியே. சூரப்பன் அதைத் தன் இஷ்டம்போலப் பழக்க அது அவனுக்கு மகனைப் போலப் பணம் சம்பாதித்துக் கொடுக்கும். எனவே ராமய்யன் செய்ததும் நீதிபதியின் தீர்ப்பும் சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# பெருங் குற்றம்!

மங்களபுரி தன் நாட்டினுள் அயல்நாடுகளிலிருந்து தங்கம் கொண்டு வருவதைத் தடைசெய்தது. திருட்டுத்தனமாக யாராவது அங்கு தங்கம் கொண்டு வந்தால் கடுமையாக தண்டிக்கப்பட்டார்கள்.

ஒரு நாள் பிங்களபுரத்தைச் சேர்ந்த ஒரு இளைஞன் மங்களபுரிக்கு வந்து தணிக்கை அதிகாரிகளிடம் "ஐயா! அடுத்த வாரம் நான் இங்கே வரும்போது தங்கம் கொண்டு வரலாமா?" என்று கேட்டான். அவர்களும் "கூடாது. அது பெருங் குற்றம்" எனக் கூறி அவனை சோதனை போடாமலேயே போக விட்டார்கள்.

ஒரு வாரம் கழித்து அதே இளைஞன் மீண்டும் மங்களபுரிக்கு வரவே சுங்க அதிகாரிகள் அவனைக் கடுமையாகச் சோதனை போட்டார்கள். அவனிடம் தங்கமே இருக்கவில்லை.

அப்போது தணிக்கை அதிகாரி "போனவாரம் வந்தபோது இந்த வாரம் தங்கம் கொண்டு வரமுடியுமா என்று கேட்டாய். ஆனால் இப்போது கொண்டு வரவில்லையே. இது ஏன்?" என்று கேட்டார்.

அந்த இளைஞனும் "இந்த வாரம் நான் தங்கம் கொண்டு வந்தால் தானே பெருங்குற்றம். அதற்காகத் தான் போன வாரமே தங்கத்தைக் கொண்டு சென்றேன்" என்றான்.

அது கேட்டு சுங்க அதிகாரிகள் திகைந்து நின்றனர்








நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

# காக்கை அல்லாத காக்கை

உடல் முழுவதும் கரிய நிறமாயுள்ள பறவைகள் நம் நாட்டில் மிகக் குறைவு. அவற்றில் காக்கை முக்கியமானது. பிளாக் ட்ராங்கோ எனப்படும் பறவைகூடக் கருப்பானதே. ஆனால் இது காக்கை இனத்தைச் சேர்ந்தது அல்ல. ஆனால் கருப்பாக இருப்பதால் ஆங்கிலத்தில் இதனைக் 'கிங்க்ரோ' என்கிறார்கள். குருவிபோலுள்ள இதற்குக் கத்திரிக்கோல்போல நீண்ட பிளவுபட்ட வால் உண்டு. இவை வயல் வெளிகளிலும் தந்திக் கம்பங்கள் மீதும் இருக்கும். தரையில் பாய்ந்து புழு பூச்சிகளைப் பிடித்துத் தின்னும்.

இது மிகத் துணிச்சலானது. இது தன்னைவிட பெரிய காக்கைகளுடன் கூடச் சில சமயங்களில் சண்டை போடும். தானிடும் முட்டைகளின் பக்கம் வேறு எந்த பறவையையும் அணுகவிடாது. தன்னருகே உள்ள மற்ற பறவைகளின் முட்டைகளுக்கும் இது காவலாக இருக்கும். வட இந்தியாவில் இதை 'பீம்ராஜ்' என அழைக்கிறார்கள்.

நம் நாட்டில் இந்தப் பறவைகள் எட்டு வகைகளில் உள்ளன. நீண்ட வாலுடைய இப் பறவையின் தலைமீது கொண்டை இருக்கும். இந்தரகப் பறவைகளில் சிலவற்றின் வயிற்றில் அடிப்பகுதி வெள்ளையாகவோ அல்லது சாம்பல் நிறத்திலோ இருக்கும். சிலவற்றின் கண்கள் சிவப்புக் கல்போல ஒளிவிட்டுப் பிரகாசிக்கும்.




# சோபா சிங்



அந்தச் சிறுவன் தரைமீது கோடுகளைப் பல விதமாய் வரைந்து கொண்டிருந்தான். அதைக் கண்ட அவனது உறவினர் ஒருவர் "நீ பெரியவனானால் உன் தந்தையைப்போல இராணுவத்தில்தானே சேரப் போகிறாய்?" என்று கேட்டார். அவனோ "இல்லை" எனத் தலையை அசைக்கவே அவர் "அப்படியானால் இப்படியே கோடுகளைக் கிழித்துக் கொண்டிருந்தால் சாப்பாட்டிற்கு என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டார்.

அச்சிறுவன் உள்ளே உள்ள தன் தமக்கையைக் காட்டினான். இச்சிறுவன் தான் பஞ்சாபின் புகழ் பெற்ற ஓவியர் சோபா சிங் எனப்பட்டான். சோபா சிங்கின் தாய் அவரது ஐந்தாவது வயதிலேயே இறந்து விட்டார். இராணுவத்தில் சர்வேயராய்ப் பணி புரிந்து வந்த அவரது தந்தை தன் மகனைப் பற்றியே கவலைப்படவில்லை. அதனால் சோபா சிங்கை அவரது தமக்கை லட்சுமி தேவியும் அவரது கணவர் சர்தார் மங்கள் சிங்கும் வளர்த்து வந்தனர். சோபா சிங் 1901ல் பஞ்சாபின் ஹரிகோவிந்த புரியில் பிறந்தார். இளம் பிராயத்தில் தாய் தந்தையரை இழந்த இவரால் ஐந்தாவது வகுப்புவரைதான் படிக்க முடிந்தது.

இவர் இராணுவத்தில்உதவி ட்ராப்ட்ஸ்மேனாகச் சேர்ந்து பயிற்சி பெற்றார். சோபா சிங் மற்றும் அவரது நண்பர்கள் சிலரும் ஈராக்கிற்கு அனுப்பப் பட்டனர். அங்குதான் இவர் ஆங்கிலம் கற்றுக் கொண்டார். அங்கு மேற்கத்திய ஓவியர்கள் வரைந்த படங்கள் அடங்கிய பல புத்தகங்களை இவர் கண்டார். அதனால் சித்திரங்கலை இவர் மனதில் மீண்டும் துளிர்த்தது.

இவர் நம் நாட்டிற்கு 1923ல் திரும்பி வந்தார். இதன்பின் இவரது திருமணம் நடந்தது. ஓவியராகத் திகழ எண்ணி இவர் தம் இராணுவ வேலையை ராஜினாமா செய்துவிட்டு லாகூரில் ஒரு ஸ்டுடியோவை அமைத்தார். வாழ்க்கை யில் பல போராட்டங்களை எதிர் நோக்கிய சீக்கிய மதக் குருமார்களின் உருவப்படங்களை இவர் வரையலானார்.



வீரச் செயல்களும் அன்பும் நிறைந்த பல பஞ்சாபிக் கதைகள் இவருக்கும் பெரிதும் உதவின.

கொஞ்ச காலத்திற்குப் பின் இவர் லாகூரில் இருந்து டில்லிக்கு வந்தார். 1742ல் பிரீத் லஹரி பத்திரிகாசிரியர் குரு பக்ஷ்சிங் லாகூருக்கும் அமிர்த சரஸிற்கும் இடையே அமைத்த ப்ரீத் நகர் என்ற சிறிய ஊருக்குச் சென்றார். இவர் அங்கும் இருக்க முடியாமல் லாகூருக்கே திரும்பிச் சென்றார்.

இந்தியா பாகிஸ்தான் என 1947ல் இரு நாடுகளாகப் பிரிக்கப்பட்டபோது சோபா சிங் லாகூரில் தன் அரிய ஓவியங்களையும் உட





மைகளையும் விட்டுவிட்டு அங்கிருந்து வெளியேறி இமாசலப் பிரதேசத்தில் கா்ங்ரா பள்ளத்தாக்கில் குடி புகுந்தார். புதிய உத்வேகத்துடன் இவர் ஓவியங்களைத் தீட்டலானார். அப்போதே இவர் சிறந்த ஓவியராகப் பெயர் பெற்றிருந்தார்.

சோபா சிங் 1986 ஆகஸ்ட் 21ல் மரணமுற்றார். ஓவியத்துறையில் முறையான பயிற்சி என்று எதுவும் இல்லாமலே இவர் தானே முயன்று உழைத்து மாபெரும் ஓவியரானார். இவர் வரைந்த படங்கள் சீக்கிய மதகுரு குருநானக் மற்றும் பல சீக்கிய குருமார்கள், கிருஷ்ணர் இராமர் முதலியன கடவுளுடையவை. இவை இன்றும் பெரிதும் மதிக்கப்பட்டு வழிபாடுகளிலும் இடம் பெற்று வருகின்றன.

# உங்களுக்குத் தெரியுமா?

1. உயிருள்ள பறவைகளில் மிகப் பெரியது எது?
2. இந்திய அரசியல் நிர்ணயச் சட்டம் எப்பொது நடைமுறைக்கு வந்தது?
3. உலக ஸ்தாபனத்தின் அங்கீகரிக்கப்பட்ட ஐந்து மொழிகள் எவை?
4. குடியரசுத் தலைவர், குடியரசுத் துணைத் தலைவர், பிரதம மந்திரி, நாடாளு மன்றத் தலைவர், மாநிலங்கள் அவைத் தலைவர் ஆகிய இவர்களில் யாரிடம் நாட்டை ஆளும் உண்மையான அதிகாரம் உள்ளது?
5. கடல்களில் மிகப் பெரியது எது? அதற்கு அடுத்தது எது?
6. 'வந்தே மாதரம்' 'ஜன கண மன' இவற்றிற்கான வேறுபாடு என்ன?
7. இலக்கியத் துறைக்கான நோபல் பரிசை முதன் முதலாக யார் பெற்றார்?
8. நம் நாட்டில் எம்மொழியில் அதிகப் பத்திரிகைகள் வெளியாகின்றன?
9. 'நள்ளிரவுச் சூரியன் நாடு' எது?
10. நம் இசைக் கருவிகளில் மிகப் பழைமையானது எது?
11. ஒலிம்பிக் விளையாட்டுகள் எவ்வளவு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடக்கின்றன?
12. நம் நாட்டில் அடிமை வம்சத்தின் ஆரம்ப மன்னர் யார்? அவர் யாருடைய அடிமையாக இருந்தார்?
13. உலகில் மிகப் பெரிய நீர் வீழ்ச்சி எது?
14. நம் நாட்டில் திரைப்படத்தை கதை வடிவில் யார் எப்போது தயாரித்தார்? அத்திரைப்படத்தின் பெயர் என்ன?
15. தாய்லாந்தின் முந்தையப் பெயர் என்ன??
16. புத்தர் எப்போது நிர்வாண முக்தி அடைந்தார்?
17. உலகின் மிகப் பெரிய விமான தளம் எது?

## விடைகள்

1. நெருப்புக் கோழி
2. 1950 ஜனவரி 26
3. ஆங்கிலம், பிரெஞ்ச், ஸ்பானிஷ், இத்தாலியன், ரஷ்ய மொழி
4. பிரதம மந்திரி
5. பசிபிக், அட்லாண்டிக்
6. முதலாவது ஆரம்ப வழிபாட்டு கீதம், இரண்டாவது தேசிய கீதம்
7. ஆர். எப். ஏ. நல்லிபிரதோம்
8. ஹிந்தி
9. நார்வே
10. வீணை
11. நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை
12. குதுப்புத்தீன், கோரி முகம்மது,
13. லாவோஸின் கோனே நீர்வீழ்ச்சி 10,800 மீ. அகலம்
14. தாதா சாகப் பால்கே, 1931, ராஜா ஹரிச்சந்திரா
15. சயாம்
16. கி.மு. 488
17. சௌதி அரேபியாவில் ரியாதின் கிங் காலித் இன்டர் நேஷனல் விமான நிலையம்



# உயர்ந்த மனிதர்

பொன்னனுக்கு அவசரமாக ஆயிரம் ரூபாய் தேவைப்பட்டது. யார் யாரிடமோ கேட்டுப் பார்த்தும் கடன் கிடைக்கவில்லை. முடிவில் மகாக் கஞ்சனான தன் சிற்றப்பா சின்னசாமியிடம் போனான்.

சின்னசாமியோ "நான் உனக்கு கடன் கொடுத்தால் நீ எப்படித் திருப்பிக் கொடுப்பாய்? உனக்கு வீடோ நிலமோ எதுவும் இல்லையே. நீ சிவகிரிக்குப் போய் சிவானந்தம் என்ற புண்ணியவானைப் பார். அவர் யாருக்கு வேண்டுமானாலும் இரக்கப்பட்டுக் கடன் கொடுக்கிறவர். அவரிடம் கடன் வாங்கி உன் முடையைத் தீர்த்துக் கொள்" என்று சொல்லி அனுப்பினான்.

பொன்னன் சிவகிரிக்கு போய் சிவானந்தத்தைக் கண்டு கடன் கேட்டான். அவரும் அவனைப் பற்றி அவனிடமே விசாரித்துவிட்டு "கடன் சுலபமாகக் கிடைக்கிறதே என்று வாங்கக் கூடாது. உன்னால் நன்கு வியாபாரம் செய்ய முடியும் என்று தெரிகிறது. நான் ஆயிரம் ரூபாய் கடன் கொடுத்தால் நீ மறு வருடம் இரண்டாயிரம் ரூபாயாகத் திருப்பித் தர வேண்டும். தவறினால் அதற்கு அடுத்த வருடம் நாலாயிரம். இப்படியே அது ஆண்டுக்கு ஆண்டு இரட்டிப்பாகும். சம்மதமா?" என்று கேட்டார்.

பொன்னனுக்கோ பணம் தேவை. இவரை விட்டால் வேறு யாரிடமிருந்தும் கிடைக்காது. இப்படி வட்டிக்கு வட்டியாக நிறையப் பணம் கறக்கும் இவரையா புண்ணியவான் என்று எல்லோரும் புகழ்கிறார்கள்? என்ன

—கி. அருணா—



வானாலும் இப்போது பணம் கிடைக்கிறதே என்று எண்ணி அவன் பத்திரம் எழுதிக் கொடுத்துப் பணம் வாங்கிக் கொண்டு சென்றான்.

முதல் வருடம் பொன்னன் அந்தப் பணத்தைக் கொண்டு வியாபாரம் செய்ததில் செலவெல்லாம் போக ஐயாயிரம் ரூபாய் லாபம் கிடைத்தது. அதிலிருந்து இரண்டாயிரம் ரூபாய் சிவானந்தத்திற்கு திருப்பிக் கொடுக்கலாம் என அவன் நினைத்தான். அப்போது ஒரு வியாபாரி அவனிடம் "உன்னிடம் ஐயாயிரம் ரூபாய் உள்ளது. உன்னை என் வியாபாரத்தில் கூட்டாளியாகச் சேர்த்துக் கொள்கிறேன். ஒரே வருடத்தில் உனக்கு முப்பதாயிரம் ரூபாய் கிடைக்கும்" என்று ஆசை காட்டினான்.

அந்த ஆசை வார்த்தையில் விழுந்த பொன்னன் "இப்போது இவனோடு கூட்டு சேர்ந்து ஓராண்டில் முப்பதாயிரம் சம்பாதித்து சிவானந்தருக்கு நாலாயிரம் ரூபாய் கொடுத்து விடலாம். அப்போது இருபத்தாறாயிரம் லாபம் தானே" என எண்ணி அதற்குச் சம்மதித்தான்.

அந்த ஆண்டு நிறைய லாபம் வரவே ஆண்டு முடிவில் சிவானந்தருக்கு கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுக்காமல் அதற்கடுத்த ஆண்டிற்குத் தள்ளிப் போட்டான். இப்படியே ஐந்து ஆண்டுகள் கழிந்தன. பொன்னனிடம் பல லட்ச ரூபாய்கள் சேர்ந்து விட்டன. அப்போது பொன்னன் "ஒரு ஆயிரம் ரூபாய் கடன் முன்பு வாங்கியதற்கு இப்போது முப்பத்திரெண்டாயிரம் ரூபாய் கொடுப்பதா? இது அநியாயம்" என எண்ணினான்.

அப்போது சிவானந்தம் தம் மகளின் கல்யாணத்தை நிச்சயித்து நகைகள் வாங்க பொன்னின் கடைக்கு வந்தார். அவர் நாலாயிரம் ரூபாய் மதிப்புள்ள ஒரு நகையைத் தேர்ந்தெடுத்து "இதை எடுத்துக் கொள்கிறேன். இப்போது கையில் மூவாயிரம் ரூபாய்தான் இருக்கிறது. பிறகு ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேன்" என்று பொன்னனிடம் கூறினார். பொன்னனுக்கு அது இஷ்டமில்லை என்றாலும் சரியெனக் கூறி நகையைக் கொடுத்து மூவாயிரத்தை வாங்கிக் கொண்டான்.

அவர் போனதும் பொன்னன் "இவரிடம் நான் வாங்கின கடன் ஆயிரம் ரூபாயை வசூலிக்க நினைக்கிறாரோ? அப்படியானால் இந்த ஐந்து வருஷ வட்டியை எப்படி இந்தப் புண்ணிவான் வசூலிக்கப் போகிறாரோ பார்க்கலாம்" என்று எண்ணிக் கொண்டான்.

ஆனால் அதற்கு இரண்டு நாட்களுக்குப் பிறகு மாரடைப்பால் திடீரென சிவானந்தம் இறந்துவிட்டார் என்ற செய்தி பொன்னனுக்குக் கிடைத்தது. அதைக் கேட்ட பொன்னன் அப்பாடா! அவரது கடனைத் தீர்க்க வேண்டியது இல்லை. அவரிடம் வாங்கிய கடன் ஆயிரம் ரூபாயை அவர் நகை வாங்கி பாக்கி செலுத்த வேண்டிய ஆயிரம் ரூபாயில் கழித்தால் கணக்கு சரியாகிவிடும். அதுதான் சரி" என்று எண்ணி மகிழ்ந்தான்.

தன் தந்தை இறந்துபோன தகவலை சிவானந்தத்தின் மூத்த மகன் எல்லாப் பிரமுகர்களுக்கும் சொல்லி அனுப்பினான். அவரது ஈமச் சடங்குகளில் கலந்து கொள்ள எல்லோரும் சென்றனர். பொன்னனும் சென்றான்.

அப்போது சிவானந்தரின் மூத்தமகன் "என் தகப்பனார் எவ்வளவோ பேர்களுக்கு உதவி இருக்கிறார். சிலருக்குக் கடனும் கொடுத்திருக்கிறார். இதையெல்லாம் ஒரு சிறு கையேட்டில்





குறித்து வைத்திருக்கிறார். அதில் அவர் எழுதிய உயில் பத்திரமும் இருந்தது. ஆனால் அது காணாமல் போனதால் தேடிக் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

சிவகிரி மணியகாரரர் ''அவை எல்லாம் உன் தந்தையின் இரும்புப் பெட்டியிலுள்ள ஒரு இரகசிய அறையில் வைத்திருப்பதாக அவர் பலமுறை என்னிடம் கூறி இருக்கிறார். அதை நான் காட்டுகிறேன். ஆனால் இன்று கரி நாள். நாளை நல்ல நாள். நாளை அதைத் திறந்து எடுக்கலாம்'' என்றார். எல்லோரும் அப்போது கலைந்து சென்றனர்.

பொன்னனுக்கு திகில் பிடித்துவிட்டது. அந்த கையேடு கிடைத்துவிட்டால் சிவானந்தரின் குடும்பத்திற்குக் கோடி ரூபாய்க்கு மேல் சேர்ந்துவிடுமே! இதை தடுக்க வேண்டும் என்று பொன்னன் மட்டுமல்ல, மேலும் நால்வரும் நினைத்தார்கள். அவர்களெல்லாம் சிவானந்தருக்கு லட்சம் ரூபாய்களுக்கும் மேலாகக் கடன் பாக்கி கொடுக்க வேண்டி இருந்தது.

இந்த ஐந்து பேர்களும் அன்றிரவு கூடி ஒரு திருடனை சிவானந்தரின் வீட்டிற்கு அனுப்பினார்கள். அவன் அங்கு போய் சிவானந்தரின் மூத்த மகனைக் கத்தியைக் காட்டி மிரட்டி இரும்புப் பெட்டியைத் திறக்கச் சொன்னான். அதிலிருந்து இரகசிய அறையை அவன் கண்டுபிடித்து அதிலிருந்த கையேட்டை எடுத்துக் கொண்டுபோய் பொன்னனிடமும் மற்ற வியாபாரிகளிடமும் கொடுத்தான்.

அவர்கள் ஐவரும் அந்தக் கையேட்டைக் கொளுத்தி அழித்துவிடத் தீர்மானித்தார்கள். அதற்கு முன் அதில் என்னதான் எழுதி இருக்கிறது என்று படிக்க விரும்பினார்கள். அதை படித்ததில் அதில் இவ்வாறு இருந் தது.

''நான் ஏழைகளுக்குக் கடன் என்ற பெயரில் பண உதவி செய்து வந்தேன். பணத்தை இனா

மாகக் கொடுப்பதென்றால் அது தேவைப்படாதவர்கள் எல்லாம் வந்துவிடுவார்கள். எனவே கடன் கொடுத்து அதை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்று கூறினேன். என் பணத்தாலும் அறிவுரைகளாலும் பலர் பயனடைந் தார்கள். அவர்கள் எனக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைத் திருப்பிக் கொடுத்தால் அதை நல்ல காரியங்களுக்காகச் செலவு செய்வேன். அதிலிருந்து ஒரு பைசா கூட என் சொந்த செலவிற்கு எடுத்துக் கொள்ள மாட்டேன். அவர்கள் கடனைத் திருப்பிக் கொடுக்காவிட்டால் பேசாமல் இருந்துவிடுவேன். அவர்களிடம் எழுதி வாங்கிய கடன் பத்திரங்களை அவர்கள் என் வீட்டிலிருந்து போனதுமே கிழித்து எறிந்து வந்தேன். என் மூத்த மகனும் என்னைப்போல நடந்தால் என் ஆத்மா சாந்தி அடையும்."

இதைப் படித்து அவர்கள் திகைத்துப் போனார்கள். அக் குறிப்பேட்டில் யார் யாருககு எவ்வளவு கொடுக்க வேண்டும் என் பதே இருந்தது. அதில் கடைசி வரி பொன்னுனுக்குக் கொடுக்க வேண்டியது ஆயிரம் ரூபாய் என் றிருந்தது.

சிவானந்தர் எவ்வளவு புண் ணியவான் என்பது அவர்களுக்கு விளங்கியது. அவர்கள் அந்தக் குறிப்பேட்டை இரகசியமாய் மறு படியும் அந்த இரும்புப் பெட் டிக்குள் வைத்துவிட்டார்கள். தாம் கொடுக்க வேண்டிய கடன் பாக்கியை சிவானந்தரின் மூத்த மகனிடம் கொடுத்தார்கள்.

சிவானந்தரின் மூத்த மகனைப் போலவே பொன்னனும் செயல் பட்டு புதிய மனிதனானான்.





# குள்ளன் கல்யாணம்

குள்ளக் குன்றம் என்ற ஊரில் சொக்கன் என்ற சித்திரக் குள்ளன் இருந்தான். அவன் மிகவும் குள்ள மாயும் அவலட்சணமாயும் இருந் தான். ஆனால் யானைகளை அடக்கிப் பழக்குவதில் அவன் திறமைமிக்கவன். அதனால் அந் நாட்டு மன்னனுக்கு யானைகள் வியாபாரத்தில் மிகவும் உதவி யாக இருந்தான்.

மன்னன் அவனது திறமையை ஒருமுறை நேரில் கண்டு மகிழ்ந்து போய் ''என் நாட்டின் ஒரு கிராமத் தில் பிறந்த உன்னைப் பற்றிப் பெருமிதம் அடைகிறேன். நீ என் தர்பாரில் இருக்கத் தகுதி பெற் றவன். எனவே என் அரண்மனை யில் யானைகளின் கட்டுத்தறி யின் முதல் அதிகாரியாக உன் னை நியமிக்கிறேன்.'' என்றான். சொக்கனும் அப்பதவியை ஏற்றுக் கொண்டான்.

சொக்கன் எல்லாவசதிகளை யும் பெற்றான். அவனுக்கு எவ் விதக் குறைவும் இல்லை. அவன் கீழ் வேலை செய்யப் பல அதி காரிகளும் பணியாட்களும் இருந் தனர். இவ்வளவு இருந்தும் அவன் தன் உருவம் பற்றிக் கவலைபட்டுக் கொண்டிருந் தான்.

மன்னன் இதை கவனித்து ''நீ கவலைப்படுவதைப் பார்த்தால் உன் வாழ்க்கையில் துணையாக இருக்க உனக்கு மனைவி தேவைப் படுகிறாள் என்றே நினைக்கி றேன். எனவே விரைவில் நீ கல் யாணம் செய்து கொள்வதே சரியானது'' என்றான்.

சொக்கன் சிரித்தவாறே ''அரசே! தங்கள் தயவால் எனக்கு நல்ல உத்தியோகம் கிடைத்திருக்கிறது.

—ரேணுகா ரவி—

ஆனால் எனக்குக் கல்யாணம் நடக்குமா என்பது சந்தேகமே'' என்றான். மன்னனும் "ஏன் நடக்காது? நானே உனக்குக் கல்யாணம் செய்து வைக்கிறேன்'' என்றான். சொக்கன் பணிவுடன் மன்னனை வணங்கினானேயொழிய அவன் கூறியதற்குப் பதில் எதுவும் கூறவில்லை.

மன்னன் சொக்கனின் கல்யாணம் பற்றி யோசிக்கலானான். அவனைப் பார்க்கும் எந்தப் பெண்ணும் அவனை மணக்க இசைய மாட்டாள். அப்படி எந்தப் பெண்ணாவது அவனை மணந்து கொண்டால் அது அவள் செய்யும் பெரும் தியாகமே. மன்னன் யோசித்து "சொக்கனுக்குத் தன் மகளை விவாகம் செய்து வைக்கும் தந்தைக்கு அந்நாட்டில் அவன் விரும்பும் இடத்தில் விளை நிலமும், வீடும், அவன் கேட்கும் பணமும் கொடுக்கிறேன்'' என்று பறைசாற்றுவித்தான்.

சொக்கனுக்குப் பெண் கொடுக்கப் பலர் விரும்பினாலும் அவர்களது பெண்கள் விகாரமான குள்ளனை மணக்க விரும்பவில்லை. முடிவில் மூன்று பெண்கள் தாம் சொக்கனை மணப்பதாகக் கூறி மன்னன்முன் வந்தார்கள்.

மன்னன் அவர்களை ஒவ்வொருவராகத் தனியாகக் கண்டான். முதலாவது பெண்ணிடம்



"நீ பயப்படாமல் கூறு. ஏன் இந்தத் திருமணத்திற்கு இசைகிறாய்?'' என்று கேட்டான். அவளும் "என் மாற்றாந்தாயின் கொடுமை தாங்காமல் அவளிடமிருந்து விடுபடவே இதற்குச் சம்மதிக்கிறேன்'' என்றாள். மன்னன் அப்போது "உனக்கு இந்தக் குள்ளன் அல்லாது வேறு ஒருவனைக் கல்யாணம் செய்து வைக்கிறேன். உனக்கு அது சம்மதமா? என்ன சொல்கிறாய்?'' எனவே அவளும் "நீங்கள் என்ன சொன்னாலும் அதன்படியே நடப்பேன்'' என்றாள்.

இரண்டாவது பெண்ணை அழைத்து மன்னன் கேட்கவே

"என் தந்தைக்கு ஐந்து பெண்கள். நான் மூத்தவள். எனக்கு இந்தக் கல்யாணம் நடந்தால் இதில் கிடைக்கும் பணத்தைக் கொண்டு என் தந்தை என் மற்ற சகோதரிகளின் விவாகங்களை நடத்தி விடுவார். அதனால் அவர் பொறுப்பும் தீர்ந்துவிடும்" என்றாள்.

மூன்றாவது பெண் குள்ளமானவளே. அவளிடம் மன்னன் "நீ இந்தக் குள்ளனை மணப்பதை விட உனக்கு வேறு அழகான வாலிபனைக் கல்யாணம் செய்து வைக்கிறேன். சம்மதமா?" என்று கேட்டான்.

அவளோ மன்னனை வணங்கி "அரசே! உங்களால் எனக்கு அழகான இளைஞனை கல்யாணம் செய்து வைக்க முடியும். ஆனால் என் மனம் ஒப்ப வேண்டுமே. நான் சொக்கனை மனதார விரும்புகிறேன் எனவே அவர் மனம் அறிந்து அதன்படி நடப்பேன்" என்றாள்.

மன்னன் அதுகேட்டு மகிழ்ந்து போனான். அவன் சொக்கனை அழைத்து "உன்னை ஒரு குள்ளப் பெண் மனதார விரும்புகிறாள். உன் மனம் அறிந்து நடக்கத் தயாராக இருக்கிறாள். அவள் ஏழை தான். நல்ல குணம் படைத்தவள். எனவே பணம் முக்கியமல்ல. குணம்தான் முக்கியம். எனவே இந்தக் குள்ளப் பெண்ணையே உனக்குக் கல்யாணம் செய்து வைக்க நினைக்கிறேன். இவளை நீ விரும்பாவிட்டால் மற்ற இரு பெண்களில் ஒருத்தியை நீ தேர்ந்தெடு" என்றான்.

குள்ளனோ அந்தக் குள்ளப் பெண்ணையே மணப்பதாகக் கூறினான். மன்னன் அவர்களுக்கு விவாகம் செய்து வைத்ததோடு மற்ற இரு பெண்களுக்கும் நல்ல இளைஞர்களாகத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கும் விமரிசையாக விவாகத்தை நடத்தி வைத்தான்.






இராமருடன் வந்தவர்களுக்கு எல்லாம் அஞ்சனாதேவி விருந்தளித்தாள். அதன் பிறகு இராமர் தம் பரிவாரங்களுடன் அயோத்திக்குத் திரும்பிச் சென்றார். வழியில் சீதை யசோதராவிடம் "நான் முன்பு சொன்னபடி அனுமார் உன் கணவரைக் காப்பாற்றி விட்டார் பார்த்தாயா!" என்று கூறினாள்.

யசோதரை சீதைக்கு நன்றி செலுத்தியவாறே "எல்லாம் உங்கள் தயவுதான். அனுமாரின் இதயத்தில் இராமரோடு உங்களையும் கண்டு களித்தேன்" என்றாள். அவளது மகன் சந்திராங்கதனும், மகள் சந்திரமுகியும் "ஆமாம் சீதாதேவியாரே! நாங்களும் பார்த்தோம்" என்றார்கள். கை தட்டியவாறே.

யசோதரையும் சீதையிடம் "அம்மணீ! நீங்களும் என்னைப்போல முத்துப் போன்ற இரு குழந்தைகளைப் பெற்றெடுப்பீர்களாக" என்று உளமாற ஆசி கூறினாள். அதுகேட்டு சீதையின் முகம் நாணத்தால் சிவந்தது.

இவ்வாறு பேசிக் கொண்டே அவர்கள் அயோத்தியை அடைந்தார்கள். யயாதி தன் குடும்பத்தவரோடு இராமரின் விருந்தாளியாக இருந்தான். யசோதரையும் அவள் இரு குழந்தைகளும் சீதாதேவியுடன் சிரித்துப் பேசி மகிழ்ந்து

—அனுமார் அயோத்தி சென்றார்—



பொழுதைப் போக்கினார்கள். சில நாட்களுக்குப் பிறகு அவர்கள் இராமரிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள்.

ஒரு பௌர்ணமியன்று மாலை யில் இராமர் சீதையுடன் அந் தப்புர நந்தவனத்தில் உலாவிக் கொண்டிருந்தார். அப்போது சந்திரோதயம் ஆகிக் கொண் டிருந்தது. இராமர் சீதையிடம் "அதைப் பார்த்தாயா?" என்று கூறினார்.

சீதையும் "கிழக்கில் தங்களது முகத்தின் பிரதிபிம்பம் தெரி கிறது" என்றாள். அப்போது இராமர் "அது என் முகமா! உன் முகம் அல்லவோ பிரதிபலித்துக் கொண்டிருக்கிறது" என்று சிரித் துக் கொண்டே கூறினார்.

சீதையோ "இந்தச் சந்திரன் தங்களது பெயரோடு தன் பெய ரையும் சேர்த்துக் கொண்டு புகழடையப் பார்க்கிறான்" என் றாள். இராமரும் "ஓஹோ! சந் திரன் இப்படி ஒரு விஷமம் செய்ய ஆரம்பித்துவிட்டானா! நான் கவனிக்கவே இல்லையே" என் றார் புன்னகை புரிந்தவாறே.

இப்படியாக அவர்கள் அங் குள்ள சிறு குளக்கரையில் அமர்ந்து பேசிக் கொண்டிருக் கையில் அக்குளத்தில் இரு அன் னங்கள் நில வொளியில் பிரகாசித்தன. சீதை அவற்றைப் பார்த்தவாறே எழுந்து மெதுவாக இராமருடன் அந்தப் புரத்திற்குச் சென்றாள்.

இரவில் சற்று நேரமான பிறகு சீதை உப்பரிகை மிது நின்று பால் பொழியும் நிலவைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சந்திரனின் பொன் போன்ற கிரணங்கள் நந்தவனத்திலுள்ள குள நீரில் விழுந்து அலைகளில் ஆடிக் கொண் டிருந்தன. குளத்தில் இருந்த இரு அன்னங்களோ இரு நட்சத்திரங் கள்போல விளங்கின.

அனுமார் கந்த மாதன மலை யில் தவம் செய்து கொண்டிருந் தார். வருடங்கள் பல கழிந்தன. அனுமாருக்கு எவ்வளவு வருடங்



கள் கழிந்தன என்பது கூடத் தெரியவில்லை. ஒருநாள் அயோத்தியிலிருந்து அனுமாரைக்காண இராமரின் கிழ வேலையாளான பத்திரன் வந்தான். அவன் அவரிடம் "இராமர் உங்களை வரச் சொன்னார்" என்று கூறினான்.

பத்திரனின் முகம் வாட்ட முற்றிருந்தது. அது கண்டு அனுமார் "பத்திரா! அயோத்தியில் ஏதாவது விபரீதமாக நடந்துவிட்டதா? ஏன் நீ கவலையுடன் இருக்கிறாய்?" என்று கேட்டார். பத்திரன் பெருமூச்சு விட்டவாறே "இன்னமும் என்ன நடக்க வேண்டும்?" என்றான். அனுமாரும் "என்னதான் நடந்தது? சட்டென்று சொல்" என்றார்.

பத்திரனும் சொல்லலானான்: "ஒரு நாள் அந்தணர்களின் கூட்டம் ஒன்று ரிஷிகளை அழைத்துக் கொண்டு இராமரைக் காண வந்தது. அவர்கள் இராமரிடம் சம்புகன் என்ற கீழ்ச் சாதியான் வேதங்களைக் கற்றுவிட்டான். அதனால் தர்மம் குலைந்துவிட்டது. இக்காரணத்தால் ஒரு பிராம்மணின் மகன் அகால மரணம் அடைந்தான். அதனால் நீங்கள் இப்போதே அந்த சம்புகனைக் கொன்றுவிட வேண்டும்" என்றார்கள்.

அவர்களைத் திருப்திப்படுத்த இராமர் கிளம்பினார். சம்புகன் முனிவர்போல வாழ்ந்து தலைகீழாக நின்று தவம் செய்து கொண்டிருந்தான். இராமர் அவனைக் கொன்றுவிட்டார். அப்போது சம்புகனின் மனைவி கபிலை இராமரைப் பார்த்து "இராமா! உனக்குக் கேடு காலம்தான் வரப் போகிறது. அதனால்தான் நீ இப்படிப்பட்ட கொடிய செயலைச் செய்தாய்" என உள்ளம் குமறிக் கூறிவிட்டு உயிர் நீத்தாள்.

இதற்குச் சில நாட்கள் பிறகு ஓரிரவில் இராமரும் நானும் மாறு வேடத்தில் நகரைச் சுற்றி வந்து கொண்டிருந்தோம். அப்போது அயோத்தி நகரின் ஒதுப்புறமாக சலவைத் தொழிலாளிகள் வசிக்



கும் இடத்தை அடைந்தோம். அங்கு ஒரு கணவன் மனைவி யிடையே வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது.

கணவன் தன் மனைவியிடம் ''நீ எங்கோ போய் இருந்துவிட்டு வந்தாய். அதனால் வீட்டிற்குள் வராதே'' என்று உறுமினான். அவளோ அழுதவாறே ''நம் மன் னர் இராமரே இராவணன் வீட்டி லிருந்த சீதாதேவியை ஏற்றபோது நீ மட்டும் இப்படிச் செய்வது சரியல்ல. நானும் ஒரு குற்றமும் செய்யவில்லையே என்றாள். அதற்கு அவள் கணவன் ''மன் னரை யாரால் தட்டிக் கேட்க முடி யாது. அவர் தாராளமாகப் பிறர் வீட்டில் இருந்துவிட்ட சீதையை ஏற்கலாம், நான் வெட்கம் மானத் திற்கு பயப்படுபவன். எனவே நான் அவர் செய்ததுபோல உன்னை ஏற்க முடியாது'' என்று உரக்கக் கூவினான்.

இதைக் கேட்ட இராமர் மனம் பெரிதும் வருந்தியது. மாசற்ற சீதையைப் பற்றி மக்கள் மனதில் இப்படி ஒரு சந்தேகம் ஏற்பட் டுள்ளதா? அரசன் மக்களுக்கு முன் மாதிரியாக அல்லவா இருக்க வேண்டும். அதனால் மக்கள் சீதையை களங்கமற்றவள் என்று நம்பும் வரை அவள் தன் னோடு அரண்மனையில் இருக்கக் கூடாது என அவர் தீர்மானித்துக் கொண்டார். அதனால் சீதை யைக் காட்டில் விட்டு வரும்படி இலட்சுமணனுக்குக் கட்டளை இட்டார். அப்போது சீதாதேவி நிறை கர்ப்பிணி. முன்பு சீதை தான் மீண்டும் காட்டிற்குப் போய் முனிவர்கள் மத்தியில் வாழ வேண்டும் எனக் கூறியதை ஒரு காரணமாகக் கொண்டு இராமர் அவளைக் காட்டிற்கு அனுப்பி விட்டார்.

இராமர் சீதையின் நினைவில் உருகிப் போய்விட்டார். நான் சிறு வயதில் அவரைத் தோளில் சுமந்தவன். அம்புலி காட்டி அகம் மகிழச் செய்தவன். அதனால் இராமருடைய பெயரோடு என்

பெயரும் சேர்ந்து இராமபத்திரன் என எங்கும் பரவியது. எனக்கு அந்த சலவைத் தொழிலாளி மீது கோபம் கோபமாகவந்தது. அவனைப் பிடித்துக் கண்ட துண்டமாக வெட்டிப் போட நினைத்து அவனைத் தேடிப் பார்த்தேன். அவன் எங்கும் கிடைக்கவில்லை. அவன் மனைவியும் கண்ணில் படவே இல்லை. எப்படியோ மாயமாய் மறைந்துவிட்டார்கள்.

காட்டில் விடப்பட்ட சீதாதேவியை வால்மீகி முனிவர் கண்டு தம் ஆசிரமத்திற்கு அழைத்துச் சென்றார். சீதாதேவிக்கு இரு குழந்தைகள் பிறந்தன. வால்மீகி அவர்களுக்கு லவன், குசன் என்று பெயர் வைத்து கல்வி புகட்டினார். தாம் இயற்றிய இராமாயணத்தை அவர்கள் தம் இனிய குரலில் பாடவும் பயிற்சி அளித்தார். அவர்களுக்கு அஸ்திரங்களைப் பிரயோகிக்க சீதாதேவி கற்றுக் கொடுத்தாள்.

ஒரு நாள் லவனும் குசனும் இராமரும் சீதையும் எப்படி இருப்பார்கள் என நேரில் போய்ப் பார்ப்பது என நினைத்து அயோத்திக்குச் சென்றார்கள். அவர்கள் இராமாயணத்தைப் பாடியவாறே அந்நகர வீதிகளில் சென்று கொண்டிருந்தார்கள்.

அப்போது வசிஷ்டரின் யோசனையின் பேரில் இராமர் தம்மருகே தங்கத்தாலான சீதையை வைத்துகொண்டு அசுவமேத யாகம் செய்யலானார். அச்சமயத்தில் இலட்சுமணன் தெருவில் இராமயணத்தைப் பாடிக் கொண்டு வரும் லவனையும் குசனையும் கண்டான். அவர்களது தோற்றம் கண்டு திகைத்து அவர்களை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றான்.



அரண்மனையில் அச்சிறுவர்கள் சீதாதேவி அக்கினிப் பிரவேசம் செய்யும் நிகழ்ச்சியை உருக்கமாகப் பாடினார்கள். அதைக் கேட்டு கௌசல்யை முதலிய அந்தப்புர பெண்மணிகளும் யாகம் செய்து கொண்டிருந்த



பெரியவர்களும் சபையில் இருந்த பிரமுகர்களும் கண்ணீர் வடித் தார்கள். இராமர் அவர்களை யாரோ ஒரு முனிவரது புதல் வர்கள் என எண்ணி அவர்களு டன் நன்கு பேசிப் பல பரிசு களையும் கொடுத்து அனுப்பி னார்.

யாகம் முடிவதற்காக அசுவ மேதயாகக் குதிரை அலங்கரிக்கப் பட்டு சூரிய வம்சத்துக் கொடி யுடன் பல நாடுகளில் திரிந்து வர அனுப்பப்பட்டது. அதன் பின் னால் வீரர்களும் சென்றார்கள். அக்குதிரை வால்மீகி முனிவரின் ஆசிரமத்திற்கு வந்தது. அதன் நெற்றியில் கட்டப் பட்டிருந்த பட்டை மீது அது இராமரின் குதிரை என எழுதப்பட்டிருந்தது. லவனும் குசனும் அக் குதிரை யைப் பிடித்துக் கட்டிப் போட்டு விட்டார்கள்.

அக்குதிரையை விடுவிக்கப் போன சத்துருக்னனும், பரத னும், இலட்சுமணனும், லவனுட னும் குசனுடனும் போர் புரிநது தம் நினைவு இழந்து விழுந் தார்கள். இதன்பின் இராமரும் அச்சிறுவர்களை எதிர்த்துப் போரிட்டுத் தம் நினைவு இழந்து விழுந்தார். சீதா தேவி அங்கு வந்தாள். களத்தில் நினைவு இழந்து விழுந்து கிடக்கும் இராமரையும் லவனையும், குசனையும் அவள் பார்த்துக் கண்ணீர் வடித்தவாறே "குழந்தைகளே! இவரை யாரென்று நினைத்தீர்கள்? இவர்தான் உங் கள் தந்தை. அயோத்தி மன்னர் இவரது சகோதரர்களான பரதன், சத்துருக்கனன், இலட்சுமணன் ஆகி யோரையும் நீங்கள் தோற்கடித் திருக்கிறீர்கள்" என்று விளக்கிய பிறகே எல்லாம் சரியாயிற்று.

அப்போது வால்மீகி முனிவர் சீதை புனிதமானவள் என இராம ரிடம் கூறி அவளை ஏற்குமாறு கூறினார். இராமரோ சீதைதான் மாசற்றவள் என மக்கள் முன் பகிரங்கமாகக் கூறினால் தாம் அவளை ஏற்பதாகக் கூறினார்.

சீதா தேவி தம் இரு புதல்வர்

களுடன் அயோத்திக்கு வந்து அவர்களை இராமரிடம் ஒப்படைத்தாள். பிறகு அவள் "நான் கற்புடைய மங்கையானால் பூமாதேவி என்னை ஏற்கட்டும்" எனக் கூறினாள். மறு நிமிடமே பூமி அதிர்ந்து இரண்டாகப் பிளந்தது. அதிலிருந்து தங்க சிம்மாசனத்தில் அமர்ந்து பூமா தேவி வெளி வந்தாள். அதிலிருந்து அவள் இறங்கி ஒரு தாய் தன் மகளை அழைத்துப் போவது போல சீதா தேவியை அழைத்துக் கொண்டு தன் ஆசனத்தில் அமர்த்திக் கொண்டு பூமிக்குள் சென்றுவிட்டாள். பிளந்த பூமி ஒன்று சேர்ந்து முன் போலாகிவிட்டது.

இராமர் கோபத்தோடு வில்லை எடுத்து பூமியைப்பிளக்கப் போனார். அப்போது ஒரு அசரீரி வாக்கு "இராமா! ரகுவம்ச மன்னர்கள் பூமியைப் பேணி நன்கு பாதுகாத்தார்கள். நீ பூமியைப் பிளக்கவா பார்க்கிறாய்? நீ சீதையை அவளது பிறந்த வீட்டிற்கே அனுப்பிவிட்டாய். இதற்குக் கோபம் கொள்வானேன்?" என்று கூறியது.

இராமர் தாம் எடுத்த வில்லைக் கீழே வைத்துவிட்டார். பிறகு லவனுக்கும் குசனுக்கும் இளவரசுப் பட்டம் கட்டி சிம்மாசனத்தில் அமர்த்தினார். அவரோ ஒரேயடியாகக் கவலையில் மூழ்கிவிட்டார்.

அசுவமேத யாகம் முடியவில்லை யாகக் குதிரை கீழ் திசையில் இப்போது திரிந்து கொண்டிருக்கிறது. இலட்சுமணனும், பரதனும், சத்துருக்கனனும் அதன் பின்னால் வீரர்களுடன் சென்று கொண்டிருக்கிறார்கள்."

பத்திரன் இவ்வாறு கூறியது கேட்டு அனுமாரின் கண்களில் நீர் நிறைந்துவிட்டது. அவர் சட்டென எழுந்து "நான் இப்போதே இராமரைக் காணப் போகிறேன். நீ மெதுவாக வா" எனக் கூறித் தன் கதையை எடுத்துத் தோளின் மீது வைத்துக் கொண்டு ஆகாய வழியாக அயோத்திக்குச் சென்றார்.






# ஆசைக்கு ஏது எல்லை?

மீஞ்சூரில் குப்புசாமி என்ற கூலி வேலை செய்பவன் இருந்தான். அவனுக்குப் போதிய வருமானம் கிடைக்காததால் அவனது குடும்பம் பல நாட்கள் பட்டினி கூடக் கிடந்தது. குப்புசாமியின் ஒரே மகன் மாணிக்கம். அவன் தன் தந்தைபடும் பாட்டைக் கண்டு மனதில் தான் பெரியவனானால் லட்சலட்சமாகச் சம்பாதித்து சுகமாக வாழவேண்டும் என்று தினமும் எண்ணி வரலானான்.

அவன் தாயும் இரண்டாண்டுகளுக்குப் பிறகு குப்புசாமியும் இறந்து போனான். அப்போது அவ்வூர் மணியகாரர் அவனை அழைத்து "மாணிக்கம்! நீ கஷ்டப் படக் கூடாது என நினைத்து உன்தந்தை என்னிடம் நூறு ரூபாய் கொடுத்து வைத்து அதை அவர் இறந்த பின் உனக்குக் கொடுக்கச் சொல்லி இறந்தார். நீ அதை வைத்து என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டார்.

அப்போது அவன் நீண்ட நாளாகத் தன் மனதில் உள்ள லட்சாதிபதியாகும் ஆசையை அவரிடம் கூறினான். அதைக் கேட்டு மணியகாரர் சிரித்து "அது கிடக்கட்டும். முதலில் நீ இந்த நூறு ரூபாயைக் கொண்டு ஆயிரம் ரூபாய் சம்பாதித்து வா, பார்க்கலாம்" எனக்கூறிப் பணத்தை அவனிடம் கொடுத்தார்.

மாணிக்கம் அந்த நூறு ரூபாயைக் கொண்டு கோழி வியாபாரம் செய்யலானான். சிலமாதங்களில் அவனது கோழிகள் முட்டைகள் இட்டன. அவற்றை விற்றதில் லாபமே கிடைத்தது. ஆனால் கொஞ்ச காலத்திற்குப் பின் அவனது கோழிகள் ஏனோ

—பாபநாசம் சாமா—

இறந்து போயின. கணக்குப் பார்த்ததில் அவன் கையில் மிஞ்சியது இருநூறு ரூபாய்களே.

கோழி வியாபாரத்தில் லாபம் இல்லை என்று மாணிக்கம் ஆட்டு வியாபாரம் செய்து பார்த்தான். அதில் சில ஆடுகள் திருடு போயின வேறு சிலவற்றை காட்டிலுள்ள ஓநாய்கள் வந்து கொன்று தின்றன. அதனால் அந்த வியாபாரத்தை விட்டு பூ வியாபாரத்தில் இறங்கினான். அதில் வாங்கின பூக்கள் எல்லாம் விலைபோகவில்லை. விலை போகாதவை வாடிப் போயின. அதில் நஷ்டமே ஏற்பட்டது. அடுத்து பொரி வியாபாரம் செய்து பார்த்தான். ஒரு நாள் சந்தையில் கடை போட்டபோது மழை பெய்து பொரி நனைந்து நஷ்டமாகியது.

இனி வியபாரத்திற்கே முழுக்குப் போட்டுவது என்று எண்ணி அவன் வீடுதிரும்பலானான். வழியில் ஒரு சிறுவன் அழுது கொண்டிருக்கவே அவன் அச்சிறுவனைத் தேற்றி அவன் வழிதவறி விட்டான் என அறிந்தான். சிறுவனிடம் ஊர் பேர்கேட்டு ஒருரூபாய் செலவு செய்து அவனது தந்தை இருந்த ஊருக்குப் போய் அவனை அவனது வீட்டில் சேர்த்தான். அவர்களோ ஏழை. மாணிக்கத்திற்கு நன்றிதான் அவர்களால்கூற முடிந்ததேயொழியப் பரிசாகப் பணமோ பண்டமோ கொடுக்க முடியவில்லை.



தன் அதிர்ஷ்டம் இவ்வளவு தானா என்று நொந்து கொண்டே அவன் தன் ஊருக்குத் திரும்பிச் செல்லலானான். அப்போது ஒரு சிறு மூட்டை வழியில் காலில் இடறியது. அதை எடுத்துப் பார்த்தான். அதில் நூறு ரூபாய் இருந்தது. யாராவது இருக்கிறார் களா என்று சுற்றிலும் பார்த்தான். யாரும் தன் பை காணவில்லை என்று தேடிக் கொண்டு வரவும் இல்லை. மாணிக்கம் அங்கிருந்து கிளம்பி வழியில் ஒரு கிராமத்தை அடைந்தான்.

அங்கு ஓரிடத்தில் ஒரு கூட்டம் நின்றது. அதன் நடுவே ஒரு பெண் நின்று அழுது கொண்டிருந்தாள். மாணிக்கம் என்ன என்று விசாரித்தபோது அந்தப் பெண்ணின் கணவனைப் பாம்பு கடித்து விட்டது என்பது தெரிந்தது. விஷத்தை உடலிலிருந்து எடுக்க வைத்தியன் நூறு ரூபாய் கேட்டான். அவ்வளவு பணம் அந்தப் பெண்ணிடம் இல்லை.

மாணிக்கம் உடனே தனக்கு வழியில் கிடைத்த பணமூட்டையை அந்தப் பெண்ணிடம் கொடுத்து "இதில் நூறு ரூபாய் இருக்கிறது. வைத்தியனுக்குக் கொடுத்து உன் கணவனைக் காப்பாற்றிக் கொள்" என்று கூறி விட்டு அங்கிருந்து சென்றான்.

அங்கிருந்து அவன் ஒரு காட்டு வழியே செல்லலானான். அப்போது ரத்தினம் என்பவனும்





அவனோடு சேர்ந்து வழி நடந்தான். இருவரும் பேசிக்கொண்டே போகையில் அவர்களை நான்கு திருடர்கள் வழிமறித்தார்கள். ரத்தினத்திடம் கொஞ்சம் தங்கம் இருந்தது. ஆனால் முதலில் திருடர்கள் மாணிக்கத்தைச் சோதனை போட்டு அவனிடம் எதுவும் இல்லை என்று கண்டு கொண்டார்கள். அவர்கள் ரத்தினத்தை அணுகுவதற்குள் ரத்தினம் தன்னிடமிருந்த தங்கம் இருந்த பையைத் திருடர்களுக்குத் தெரியாமல் மாணிக்கத்தின் பைக்குள் போட்டுவிட்டான்.

திருடர்கள் ரத்தினத்தை சோதனை போட்டார்கள். அவர்களுக்கு எதுவும் கிடைக்காததால் இருவரையும் வாய்க்கு வந்தபடி திட்டி அவர்களைப் போக விட்டார்கள். இருவரும் சற்று தூரம் போனபின் ரத்தினம் மாணிக்கத்தின் பையை வாங்கி அதிலிருந்து தன்பையை எடுத்தான். அவன் மாணிக்கத்திடம் "இன்று உன்னால் தான் இந்தத் தங்கம் திருடர்களுக்குக் கிடைக்காமல் தப்பியது. நீ இப்போது என்னோடு என் வீட்டிற்கு வந்து விட்டுத் தான் போக வேண்டும்" என்று வற்புறுத்தினான்.

மாணிக்கமோ பணிவுடன் மறுக்கவே ரத்தினம் அப்பையிலிருந்து கொஞ்சம் தங்கத்தை எடுத்து மாணிக்கத்திடம் கொடுத்து விட்டுத் தன் ஊருக்குப் போனான். மாணிக்கமும் தன் வழியில் சென்றான்.

சற்று தூரம் போனபோது அவன் ஒரு மனிதன் ஒரு மரத்தில் சுருக்குப் போட்டுத் தற்கொலை செய்து கொள்ள முயல்வதைக் கண்டான். அவன் அங்கு ஓடிப் போய் "இதென்ன வேலை! அப்படித் தான் தற்கொலை செய்து கொள்ள வேண்டும் என்றால் அதை உன் வீட்டில் செய்து கொண்டிருக்கலாமே. இப்படி நடுப் பாதையில் எல்லோரும் பார்க்கும் படியா செய்வது?" என்று சற்று கோபித்துக் கொண்டு கேட்டான்.

அவனும் "என் பெயர் சந்திரன். என் பெண்ணிற்கு கல்யாணம் நிச்சயமாகியது. நான் என் பெண்ணிற்கு தங்க அட்டிகை போடுவதாகக்கூறி இருந்தேன். ஆனால் அதைச் செய்து போட என்னிடம் பணம் இல்லை. அட்டிகை போடாமலிருந்தால் அவமானம். எனவே தற்கொலை செய்து கொள்ள முடிவு செய்தேன்" என்றான்.

அப்போது மாணிக்கம் "ஒன்றைச் செய்ய முடியாதபோது அதைச் செய்வதாகக் கூறுவது மகாத் தப்பு. இதோ பார்! என்னிடம் கொஞ்சம் தங்கம் உள்ளது. இதை எடுத்துப் போய் விற்று உன் மகளுக்கு தங்க அட்டிகை வாங்கி போடு" என்று கூறி தான் ரத்தினத்திடமிருந்து பெற்ற தங்கத்தை அவனிடம் கொடுத்தான்..

சந்திரனும் மகிழ்ந்துபோய் மாணிக்கத்திற்கு நன்றி செலுத்தி "நீ என்னைவிட வயதில் சிறியவன். என்னை முன்பின் அறிந்தவனும் அல்ல. ஆனால் சமயத்தில் வந்து நீ எனக்கு உதவி இருக்கிறாய். என்னோடு வந்து என் மகளை ஆசீர்வாதம் செய்" என்றான்.

மாணிக்கமும் சந்திரனோடு அவன் வீட்டிற்குச் சென்றான். அப்போது ஒரு பெரியவர் மாணிக்கத்தைக் கண்டு "நீ மீஞ்சூர்



குப்புசாமியின் மகன்தானே. உன் தகப்பனார் ஒருமுறை என் உயிரைக் காப்பாற்றினார். திருடர்கள் என்னை அடித்துப் போட்டு விட்டார்கள். உன் தகப்பனார் என்னைத் தூக்கி கொண்டுபோய் வீட்டில் படுக்கவைத்தார். இப்போது அவர் எப்படி இருக்கிறார்?" என்று கேட்டார்.

மாணிக்கம் தன் தகப்பனார் இறந்துவிட்டார் என்று கூறவே அந்தப் பெரியவர் மிகவும் வருந்தினார். அவர் மாணிக்கத்தை தன் வீட்டிற்கு அழைத்துப் போய்ப் புத்தாடைகளைக் கொடுத்து ஆயிரம் ரூபாய்களையும் கொடுத்தார்.

மாணிக்கம் அந்தப் பணத்

தோடு தன் ஊரை அடைந்து மணிய காரரிடம் அந்தப் பணத்தைக் காட்டினான். அவரும் அவனுக்கு அந்தப் பணம் கிடைத்தது எப்படி என்று கேட்டுத் தெரிந்து கொண் டார்.

அப்போது அவர் சிரித்துக் கொண்டே "நீ இந்த ஆயிரம் ரூபாயை உன் சொந்த முயற்சி யால் சம்பாதிக்கவில்லை. யாரோ ஒருவர் உன் நற்குணத்திற்காகக் கொடுத்தது. ஆனால் நீ செய்த வியாபார முயற்சிகள் எல்லாம் பயனில்லாமல் போயினவே. அதனால் உன் சாமர்த்தியம் எவ் வளவு என்பதைப் புரிந்து கொண் டாயா?" என்று கேட்டார்.

மாணிக்கமும் சற்று யோசித்து "ஆமாம். நான் லட்ச லட்சமாகச் சம்பாதிப்பேன் என்று மனக் கோட்டை கட்டினேன். அது என் னால் முடியாது என்று இப்போது தான் தெரிகிறது" என்று அவரை வணங்கியவாறே கூறினான்.

மணியகாரர் அவனைத் தட்டிக் கொடுத்து "இதோ பார். லட்ச லட்சமாக சம்பாதிப்பது தான் செல்வம் என்பது அல்ல. எனெ னில் பணம் சம்பாதிக்கும் ஆசைக்கு ஒரு எல்லையே இல்லை. நீ இந்தப் பணத்தை வைத்துக் கொள். ஆனால் என்னோடு விவ சாய வேலைகளைச் செய். நல்ல சம்பளம் கொடுக்கிறேன். ஆனால் பணத்தை மட்டும் வீணாகச் செலவு செய்யாதே. அப்போது உன்னிடம் பணம் சேரும். இவ் விதமாய் கிடைப்பதே உண்மை யான செல்வம்" என்றார்.

மாணிக்கம் அவரது அறிவு ரையை ஏற்று எல்லா விவசாய வேலைகளையும் மணியகாரரின் வயல்களில் வேலை செய்து நல் லவன், திறமை மிக்கவன், நம்பக மானவன் என்று பெயர் பெற் றான். பிறகு அவன் திருமணம் செய்து கொண்டு நல்லவிதமாய்க் குடும்பம் நடத்தி வந்தான்.



# அம்புலிமாமா செய்திகள்





## மிகச் சிறிய புத்தகம்

ஸ்வீடன் நாட்டில் லாண்ட்ஸ்ரோக்னா என்ற ஊரில் மிகச் சிறிய குரான் பிரதி உள்ளதாம். மூல அராபிய மொழியில் உள்ள இப்புத்தகம் 2.7 செ.மீ பருமனே. இதன் சொந்தக்காரரின் தந்தையோ இதனை ஒரு ஏலத்தில் எடுத்தாராம். இதுவரை மிகச் சிறிய புத்தகம் சீனாவில் இருந்தது. இப்போது ஸ்வீடனின் புத்தகமே மிகச் சிறியது என கின்னஸ் புத்தகம் கூறுகிறது.




## ஐஸ் ரயில் வண்டி

மிக வேகமானதும் நவீன வசதிகளும் கொண்ட ரயில் வண்டி ஜெர்மனியில் உருவாக்கப்பட்டுள்ளது. இது பனிக்கட்டி மீது செல்லாது ஆயினும் இதற்கு இப்படிப் பெயர் வைக்கப்பட்டது. இது மணிக்கு 250 மைல் வேகத்தில் செல்லக் கூடியது. அமெரிக்காவின் 'ஆம்ட்ராக்' என்ற தனியார் நிறுவனம் இந்த ரக ரயில் வண்டிகள் 25 வாங்கப் போகிறது. 1994 ஜனவரியிலிருந்து வடமேற்கு அமெரிக்காவில் இவை ஓடுமாம்.

## வீடியோவில் 'பிடிபட்ட' பிசாசு

பிசாசுகளின் புகைப்படங்களை எடுத்ததாக அவ்வப்போது கேள்விப்படுகிறோம். ஆனால் ஒரு பிசாசு திரிந்ததை வீடியோ படம் எடுத்திருக்கிறார்கள். பிஜி தீவுகளின் நாடளுமன்றக் கட்டடத்தில் ஒரு பிசாசு திரிவதை அங்குள்ள காவல்காரர்கள் பார்த்து அதை வீடியோ வில் படமாகப் பிடித்தார்கள். அதன் பிரிதிகளை அவர்கள் பிரதம மந்திரிக்கும் எதிர்க் கட்சித் தலைவருக்கும் அனுப்பினார்கள். அவர்கள் ஒளிபரப்ப அனுமதித்தார்கள். மனிதன் நிழல் போன்ற ஒரு உருவம் ஒரு அறையில் சுற்றுவதுதான் அது. அப் பிசாசு பிஜி நாட்டின் பழங்கால முறைப்படி இடுப்பில் மர விழுதுகளைச் சுற்றிக் கொண்டிருந்ததாம்.



## மறைந்தது பெரியம்மை!

குழந்தைகளுக்கு அம்மைத் தடுப்புக்கான ஊசி குத்துதல் நேற்றுவரை கட் டாயமாக இருந்தது. இந்நோயை அறவே ஒழிக்க முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. இது வெற்றி பெற்று இப்போது உலகில் பெரியம்மை நோய் வந்தது என எவ்வித குறிப்பும் எந்த அலுவலகத்திலும் இல்லை. இந்த நோயின் கிருமிகளை ஆய்வுக்காக ஆய்வுக் கூடங்களில் மட்டும் வைத்திருந்தார்கள். வரும் டிசம்பர் 31ல் அந்தக் கிருமிகளைகூட அழித்து பெரியம்மையே இல்லை எனச் செய்ய உலக சுகாதார நிறுவனம் தீர்மானித்துள்ளது.




# கங்கை போனது!

ஒரு ஊரில் ஒரு அப்பாவி பிராம்மணன் இருந்தான். அவன் ஏதோ ஒரு பாவம் அறியாமல் செய்துவிட்டான். ஊரார் அவனிடம் "நீ கங்கை நதியில் குளித்தால் இந்தப் பாவம் போய்விடும். அங்கேயே கரையில் அமர்ந்து ஜெபமும் செய்" என்றார்கள். அதனால் அந்தப் பிராம்மணன் தன் சொத்தை தன் மகனிடம் ஒப்படைத்துவிட்டு கங்கையில் குளிக்கக் கிளம்பிவிட்டான்.

சில நாட்கள் நடந்து அவன் ஒரு கால்வாயைக் கண்டான். அதுதான் கங்கை என நினைத்து அதன் கரையில் தங்கி தினமும் அதில் குளித்து ஜெபம் செய்யலானான். ஒரு நாள் ஒரு சன்னியாசி அவனைப் பார்த்து "அப்பனே! இங்கே என்ன செய்கிறாய்?" என்று கேட்டார்.

அந்த பிராம்மணனும் "என் பாவத்தைப் போக்கிக் கொள்ள இந்த கங்கை நதியில் குளித்து ஜெபம் செய்கிறேன்" என்றார். அதுகேட்டு சன்னியாசி சிரித்து "இது கங்கை நதி இல்லை. ஒரு கால்வாய், கங்கை நதி வெகு தூரத்தில் இருக்கிறது. அது இதை விட அகலமானது" என்று கூறி விட்டுப் போனார்.

பிராம்மணன் அங்கிருந்து எழுந்து பல நாட்கள் நடந்து ஒரு பெரிய ஆற்றைக் கண்டான். சன்னியாசி கூறியபடி அது அகலமாக இருந்ததால் அதுதான் கங்கை நதி என்று எண்ணி அதில் தினமும் குளித்து கரையில் அமர்ந்து ஜெபம் செய்யலானான்.

ஒருநாள் அவ்வழியே ஒரு மந்திரவாதி வந்தான். அவன் அந்த பிராம்மணனைக் கண்டு "இந்தக்

—எஸ். சோபினி—

காட்டாற்றின் கரையில் உட்கார்ந்து கொண்டு ஏன் ஜெபம் செய்கிறாய்?'' என்று கேட்டான். அதைக் கேட்ட பிராம்மணன் "இது கங்கை நதி இல்லையா?'' எனவே அவனும் "அட பாவமே! இதையா கங்கை நதி என்று நினைத்து இதில் குளித்து வருகிறாய்! கங்கை நதி இன்னும் வெகு தூரத்தில் உள்ளது. அதில் பலர் குளிப்பதைப் பார்க்கலாம். இந்த மாதிரி ஜன நடமாட்டமே இல்லாமல் அது இராது'' என்று கூறி விட்டுப் போனான்.

பிராம்மணனும் தன்மனதில் "இவன் வந்து இது கங்கை நதி இல்லை என்று கூறியது எவ்வளவு நல்லதாகிப் போய்விட்டது. இல்லாவிட்டால் இந்த காட்டாற்றை கங்கை என நினைத்து என் ஆயுள் காலம் முழுவதையும் இங்கேயே கழித்திருப்பேன். என் பாவமும் என்னைவிட்டு விலகாமலேயே இருந்திருக்கும்'' என்று எண்ணி அங்கிருந்து கிளம்பினான்.

பல வாரங்கள் நடந்து அவன் ஒரு நதியைக் கண்டபோது அவன் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லாமல் போயிற்று. ஏனெனில் அதில் பலர் குளித்துக் கொண்டிருந்தார்கள். பிராம்மணனும் அந்நதியில் தினமும் குளித்து கரையில் அமர்ந்து ஜெபம் செய்யலானான். இப்படியே சில மாதங்கள் கழிந்தன.

ஒருநாள் அவன் அந்நதியில்



குளித்துக் கொண்டிருந்தபோது அவனருகே நின்ற ஒருவர் "சப்த நதிகளில் ஒன்றான நர்மதா நதியே! இப்போது நான் செய்யும் ஸ்நானத்தால் என்னைப் புனித மாக்கு" என உரக்கக் கூறி அதில் முங்கி எழுந்தார்.

அதைக் கேட்ட பிராம்மணன் திடுக்கிட்டுப் போனான். உடனே அவன் அருகில் நின்றவரிடம் "இது கங்கை நதி இல்லையா?" என்று கேட்கவே அவரும் "இது நர்மதை நதி. கங்கை நதி இங் கிருந்து வெகுதூரத்தில் உள்ளது" என்றார்.

அதுகேட்டு பிராம்மணன் பெரு மூச்சு விட்டவாறே" நான் இதை கங்கை நதி என்று நினைத்துவிட் டேன். இனி அதைத் தேடிப் போகிறேன்." எனக் கூறி அங் கிருந்து கிளம்பினான். அவன் பல நாட்கள் நடந்து சோர்ந்து போ னான். ஆனாலும் கங்கையைக் காண வேண்டும் என்ற ஆர்வத் தில் எப்படியோ தட்டுத்தடுமாறி நடந்து முடிவில் கங்கைக் கரையை அடைந்துவிட்டான்.

அங்கு பலர் "ஆகா! கங்கா நதியே. புனிதமான உன்னைப் பூசிக்கிறோம்." என உரக்கக் கூறி அதில் ஸ்நானம் செய்வதை அந்த பிராம்மணன் கண்டான். உடனே அவன் "ஆ! கங்கை நதி வந்து விட்டது "எனக் கூறி அந்தக் கரை யிலேயே விழுந்து இறந்து போனான்.

எமதூதர்கள் அவனது உயிரை எடுத்துக் கொண்டு எமலோகம் செல்லவே எமனும் தன் கணக் கன் சித்திர குப்தனைப் பார்த்து "இவன் செய்த பாவங்கள் யாவை? என்று கேட்டான். சித்திர குப்த னும் "இவன் செய்தது ஒரே பாவம்தான். ஆனால் இருபது வருஷமாக கங்கா ஸ்நானம் என்று கூறிக் கொண்டே குளித்தால் அந் தப் பாவமும் மறைந்து போ யிற்று" என்று கூறினான்.!



# இயற்கை விநோதங்கள்



## கிளிகள்

வளர்ப்புப் பறவைகளில் கிளி முதலிடம் பெறுகிறது. இவற்றை பேசவும் பழக்குகிறார்கள். கிளிகள் முன்னூறு வகைப் பட்டவை. இவற்றில் எழுபது வகைகள் அழிந்து போகும் நிலையில் உள்ளன. மத்திய, தென் அமெரிக்காவிலுள்ள 'மாகாஸ்' என்ற கிளிகள் தாம் கிளிகளிலே மிகப் பெரியவை. நியூகினியாவின் 'பிக்மி' கிளி தான் மிகச் சிறியது. சாதாரணமாகக் கிளி பச்சை நிற உடலையும் சிவந்த மூக்கையும் கொன்டது. மெக்ஸிகோவின் சிவப்பு நிறக் கிளிகள் பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கும். பெரியகிளி 85 செ. மீ. நீளம். சிறிய கிளி 10 செ. மீ. நீளம். நியூஜிலாண்டின் 'கியா' கிளிகள் மாமிசம் உண்பவை. வளைந்த மூக்கும் கால்களில் முன்பக்கம் இரண்டு விரல்களும் பின்பக்கம் இரண்டு விரல்களும் உள்ளது கிளியின் சிறப்பாகும்.



## முள்ளம் பன்றி மீன்

தற்காப்பிற்காக உயிரினங்கள் பல உபாயங்களைக் கையாளுகின்றன. முள்ளம் பன்றி மீன் எனப்படும் மீன் தன்னை எதிரிகளிடமிருந்து காத்துக் கொள்ள எதிரியைக் கண்டதும் நிறைய நீர்ரைக் குடித்துத் தன் உருவத்தைப் பெரிதாக்கிக் கொள்கிறது. அப்போது அதன் உடலில் நீண்ட முட்கள் போன்ற ரோமங்கள் தென்படுகின்றன. அவற்றை கண்டு அதன் எதிரிகள் பயந்து ஓடிவிடுகின்றன.



## ரோஜா ஜெபமாலை!

ரோஜா மலரை விரும்பாதவர் யார்? இந்த ரோஜாச் செடிகளை முகலாயர்கள் நம் நாட்டிற்கு முதன் முதலாகக் கொண்டு வந்தார்கள். ஈரானிலிருந்து இம் மலர்ச் செடி நம் நாட்டிற்கு வந்தது. ஆறாவது நூற்றாண்டில் பாரசீகத்தை 'ரோஜா நாடு' என்றே அழைத்தார்களாம். அங்கேயுள்ள ரோஜாத் தோட்டமான குலிஸ்தான் உலகப் புகழ் பெற்றது. இதனைக் கடக்க ஒரு குதிரை மீதேறி ஆறு நாட்கள் பயணம் செய்ய வேண்டுமாம். கி. மு. 3000 லேயே சீனாவின் ரோஜாத் தோட்டங்கள் இருந்தனவாம். மைதாஸ் ரோஜாச் செடிகளை கிரேக்க நாட்டிற்கு அங்கிருந்து கொண்டு சென்றாராம். ரோஜா இதழ்களை உதிர்த்து உலரவைத்து அவற்றில் கருப்புச் சாயம் ஏற்றி பக்தர்கள் பயன்படுத்த ஜெப மாலைகளைத் தயாரிக்கிறார்கள்.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றுர், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ் அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்**

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி**

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 பிப்ரவரி மாத இதழில் வெளியிடப்படும்**



N. Sambasiva Rao



M. Natarajan

* தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். * டிசம்பர் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

* எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. * தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## அக்டோபர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **நீரிலே மிதக்கும் நிஜமான படகுகள்**

இரண்டாவது போட்டோ: **கற்பனையில் பிறக்கும் நிழலான காட்சிகள்**

பரிசு பெற்றவர்: **ஜே. மீனாட்சி, சேலம்-15.**


## அம்புலிமாமா

**இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 48-00**

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி:

**டால்டன் ஏஜென்சீஸ்,** சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600 026

**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

Regd. No. M.